உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவார்ச்சனைத் திருமந்திரம்

(திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய
திருவாரூர் போற்றித் திருத்தாண்டகம்)

மூலமும் குறிப்புரையும்

இது ஒவ்வொருவரும் பிரதிதினமும் காலையில்
நியமத்துடன் பாராயணஞ் செய்யத்தக்கது.



முதற்பதிப்பு—௫௱.

ஸ்ரீ பாலசுப்பிரமணிய நிலையம்.
ராயப்பேட்டை, சென்னை.

அக்ஷய ௵ வைகாசி ௴ ௩௧௳

 [விலை அணா ஒன்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவார்ச்சனைத் திருமந்திரம்

(திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய
திருவாரூர் போற்றித் திருத்தாண்டகம்)

## மூலமும் குறிப்புரையும்

இது ஒவ்வொருவரும் பிரதிதினமும் காலையில்
நியமத்துடன் பாராயணஞ் செய்யத்தக்கது






முதற்பதிப்பு—௫௲.

ஸ்ரீ பாலசுப்பிரமணிய நிலையம்,

ராயப்பேட்டை, சென்னை.

அக்ஷய ௵ வைகாசி ௴ ௫ ௧௨

 [விலை அணா ஒன்று.

உ

திருச்சிற்றம்பலம்



# முகவுரை

அநாதியாகிய ஆணவாதி மலத்திரயங்களால் கட்டுண்டுழலும் ஆன்மாக்கள் உய்யுமாறு அநாதி மலமுத்தரும் நித்தியரும் சர்வவியாபகரும் சர்வகர்த்தரும் நித்தியானந்தரும் சுதந்திரருமாயுள்ள கருணையங்கடலாகிய சிவபெருமான் ஆதியில் தமது தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம் என்னும் நான்கு திருமுகங்களினின்றும் முறையே இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும், ஈசானம் என்னும் ஊர்த்துவ முகத்தினின்றும் காமிகாதி ஆகமங்கள் இருபத்தெட்டினையும் அருளிச் செய்தனர்.

---

ஈசானம்:—வடகீழ்த்திக்கை நோக்கிப் படிகமயமாய் விளங்கிநின்று மந்திர ஞானத்தைத் தோற்றுவித்து அனைத்தையும் ஆளுந்தன்மை புடையது.

தற்புருடம்:—கிழக்குத்திக்கை நோக்கிக் கோங்கம்பூ நிறத்ததாய் விளங்கிநின்று அதிமார்க்க ஞானத்தைத் தோற்றுவித்து யாவற்றையும் காக்குந்தன்மை புடையது.

அகோரம்:—தெற்குத்திக்கை நோக்கிக் கருநிறத்ததாய் விளங்கிநின்று அத்தியான்மக ஞானத்தைத் தோற்றுவித்து எல்லா வத்துக்களையும் அழிக்குந் தன்மையுடையது.

வாமம்:—வடக்குத் திக்கை நோக்கி வெட்சிப்பூ நிறத்ததாய் விளங்கிநின்று வைதிக ஞானத்தைத் தோற்றுவித்து அனைத்தையும் விளக்குந் தன்மையுடையது.

சத்தியோசாதம்:—மேற்குத்திக்கை நோக்கிப் பால் நிறத்ததாய் விளங்கிநின்று லௌகிக ஞானத்தைத் தோற்றுவித்து எவைகளையும் ஆக்குந் தன்மையுடையது.

பின்னர் ஒரு காலத்தில் பிரமதேவனது மானதபுத்திராகிய சனகாதியர் அவ்வேதாகமங்களின் மெய்ப்பொருளைச் சிவபெருமானால் ஓங்காரவாயிலாக உபதேசிக்கப்பெற்று, அறம் பொருள் இன்பம் வீடு என நான்மறையாக இயற்றினார்கள். அப்பண்டைத் தமிழ்நான்மறை பல்லூழி நிலவி மறைய, பின்னர் அச்சிவபெருமானே திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகள் ஆகிய இந்நான்கு சமயாசாரிய மூர்த்திகள்பால் அதிட்டித்து * நின்று அவர்களது திருமுகங்களினின்றும் தேவார திருவாசகமாம் தமிழ் வேதங்களையும், மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியர், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவாசாரியர் ஆகிய இந்நான்கு சந்தானாசாரிய மூர்த்திகள்பால் அதிட்டித்து நின்று அவர்களது திருமுகங்களினின்றும் சிவஞானபோதமென்னும் உயர்ஞானநூலை இருதயமாகக் கொண்ட சிவாகமங்களையும் தோற்றுவித்தருளினார்.

மேற்கூறிய தமிழ் வேதங்களில்

| | | | |
|---|---|---|---|
| திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அருளியவை | | ருசுகூ | பதிகங்கள் |
| திருநாவுக்கரசு சுவாமிகள் | ,, | சகூக | ,, |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் | ,, | கூஎக | ,, |
| ஆகப் பதிகங்கள் | | ஈஉகூ | ஆகும். |

ஆனால் அவை எழுதப்பட்ட ஏடுகளிற் பெரும்பான்மை சிவபெருமானது திருவருளால் வன்மீக † மூடப்பட்டன. அதனால் மறைந்தவைபோக எஞ்சிநின்றவை

| | | |
|---|---|---|
| திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள் | கூஅச | பதிகங்கள் |
| திருநாவுக்கரசு சுவாமிகள் | கூகக | ,, |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் | ஈ | ,, |
| ஆகப் பதிகங்கள் | எகூரு | ஆகும். |

---

* அதிட்டித்து - நிலைப்பட்டு. † வன்மீகம் - புற்று.

பின்னர் சம்பந்தரும் நாவுக்கரசரும் அருளிய பதிகங்கள் முறையே மும்மூன்று திருமுறைகளாகவும், சுந்தரர் அருளியவை ஏழாந் திருமுறையாகவும் மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும் திருச்சிற்றம்பலக் கோவையாரும் எட்டாந் திருமுறையாகவும் வகுக்கப்பட்டு அவற்றுடன் திருமாளிகைத்தேவர் சேந்தனார் முதலியோர் அருளிச்செய்த திருவிசைப்பா திருப்பல்லாண்டுகள் ஒன்பதாந் திருமுறையாகவும், அறுபத்துமூன்று நாயன்மாரில் ஒருவராகிய திருமூலர் அருளிச்செய்த திருமந்திரம் பத்தாந் திருமுறையாகவும், திருவாலவாயுடைய சிவபிரான் திருவாய் மலர்ந்தருளிய திருமுகப் பாசுரமுதலிய நாற்பது பிரபந்தங்களும் பதினொராந் திருமுறையாகவும், சேக்கிழார் அருளிச்செய்த திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாந் திருமுறையாகவும் சேர்க்கப்பட்டன.

மேற்கூறிய சிவாகமமென்னும் சைவசித்தாந்த சாத்திரம் திருவுந்தியார் முதல் சங்கற்பநிராகரணம் இறுதியாக வரும் பதினான்குமாம். அவற்றின் விவரம் பின்வருமாறு:—

| | | |
|---|---|---|
| உய்யவந்ததேவநாயனார் அருளிய | திருவுந்தியார் | க |
| திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார் | ,, திருக்களிற்றுப்படியார் | உ |
| மெய்கண்டதேவர் | ,, சிவஞானபோதம் | ௩ |
| அருணந்திசிவாசாரிய சுவாமிகள் | ,, சிவஞானசித்தியார் | ௪ |
| | இருபாவிருபஃது | ௫ |
| மனவாசகங்கடந்தார் | ,, உண்மைவிளக்கம் | ௬ |
| உமாபதிசிவாசாரிய சுவாமிகள் | ,, சிவப்பிரகாசம் | ௭ |
| | திருவருட்பயன் | ௮ |
| | வினாவெண்பா | ௯ |
| | போற்றிப்பஃறொடை | ௰ |
| | கொடிக்கவி | ௰க |
| | நெஞ்சுவிடுதூது | ௰உ |
| | உண்மைநெறிவிளக்கம் | ௰௩ |
| | சங்கற்ப நிராகரணம் | ௰௪ |

இத்தகைய சிறப்புவாய்ந்த தோத்திரப்பாக்களும் சாத்திரப்பாக்களுமாகிய அகண்டாகார சிவபோக மென்னும் பேரின்பவெள்ளம் சித்தாந்தசைவர்களாகிய நம்மனோர் மட்டுமேயன்றி ஏனைய ஆன்மகோடிகள் அனைவரும் சேர்ந்து புசிக்குமாறு பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏகவுருவாய்க் கிடக்கின்றதென்பதை நம்மில் ஒரு மிகச்சிலரே அறிவர். ஏனையோர் பெறுதற்கரிய பிறவியைப்பெற்றும் பெறுதற்கரிய பிராணடிபேணுதவராய் இத்தகைய அரிய நூல்கள் இருக்கின்றன என்பதைக் காதினாற் கேட்டறியாமலும் கேட்டறிய மனமில்லாமலும் சமயவுணர்ச்சி ஒரு சிறிதுமிலராய்த் தங்கள் வருணாசிரம தருமத்தினின்றும் வழுவித் தங்கள் குலாசாரங்களை அறவொழித்து நடுவுநிலைமையினீங்கிப் பெரும்பான்மையும் தீயவழியிலேயே ஏராளமாய்ப் பொருள் சம்பாதிக்கின்றனர். அன்றியும் அவர்கள் அவ்வாறு கிடைத்த பொருளில் ஒரு மிகச்சிறு பகுதியேனும் தக்கார்க்குதவாது தம் பெண்டிர் மக்களுடன் அறுசுவையுண்டியைப் புந்திமகிழ உண்டும் பட்டாடைகளை உடுத்தும் விலையுயர்ந்த கனகரத்நாபரணங்களை அணிந்தும், மற்றுமுள்ள நாடகம்பார்த்தல் வேசையரிணக்கம் மதுபான முதலியவற்றிற் செலவிட்டு அத்தகைய பொய்யுலக போகங்களை அநுபவித்தும் பின்னர்த் துன்பம்பயக்கும் இன்பமாந்துவதே போந்தநெறியென்றெண்ணி அவற்றிலேயே காலத்தைப்போக்கித் தங்கள் வாணாட்களை வீணாட்களாக்கிப் பெறுதற்கரிய பேறிழந்து வாளா மாழ்கின்றனர். வேறு சிலர் சமயவுண்மைகளைப் பிரழவுணர்ந்தும், தாமுணர்ந்தமுறையிற் குறுகிய அறிவினையுடைய நன்மக்களுக்குப் போதித்தும் தாங்கள் கெடுவதுடன் அவர்களையும் கெடுக்கின்றனர். இன்னாது இப்பரிதாப நிலைமைக்கு ஒரு முக்கியகாரணம் நமது தேயத்தில் மெல்லெனப்புகுந்து நாளுக்குநாள் ஓங்கிவளர்ந்து உலாவித் திரிகின்ற பிறதேசப் போலிநாகரிகமாய நோயினால் நமது சைவமக்களிற் பலர் அநியாயமாய்ப் பீடிக்கப்பட்டுத் தமிழ்மொழிஞானம் நிரம்பப்பெறாது, சிலர் சிறிது தமிழ்க் கல்வி பயின்றும், சிலர் தமிழ்க் கல்வியே பயிலாமலும்

இருப்பதே யாகும். இவ்வாறு பீடிக்கப்பட்டவர்களிற் சிலர் தமிழ் எழுதவாவது பேசவாவது படிக்கவாவது முடியாதவர்களா யிருப்பதுடன், தங்கள் குறையை ஒரு சிறுமையா யெண்ணாது பெருமையாகப் பாராட்டுகின்றனர். இதனால் தமிழ் மாதாவானவள் அவர்களைத் தன் புதல்வராகக் கொள்ள நாணுகின்றாள். தமிழ்மொழிஞானம் நிரம்பப் பெற்று ஆய்ந்த நூற் கல்வி கேள்விகளினால் நன்றிது, தீதிது, ஆவதிது, அல்லதிது, குணமிது, குற்றமிது என்ற உண்மை யறிவு முதிர்ந்து துறவடைந்தோரையுங் கூட இந் நோய் வருத்தாமல் விடவில்லை என்றால், அந்தோ! இதன் கொடுமையை என்னென்று கூறுவாம். மேற்கூறிய நோயினால் நம்மவர் பீடிக்கப்படுவதன் காரணம் அன்னோர் ஆங்கிலக் கல்வியாகிய அரியவுணவைக் குற்றமுலப்பிக் குணமுவந்து நெறிதெரிந்து முறையுணர்ந்து அளவறிந்து உண்ணாமையே யாகும். ஆங்கிலம் கற்கவிரும்புவோர் கற்கலாம். உயர்தரப் பரீட்சைகளில் தேர்ந்து புகழையும் செல்வத்தையும் மிகுதியாய்ப் பெற முயலலாம். ஆனால் அவ்வாறு முயல்வதில் அவை யாவற்றிற்கும் தங்கள் சுதர்மமே மகுடமாய் விளங்குவது என்னும் உணர்ச்சியினை எப்போதும் உடையவர்களாய், அத் தர்மத்தை அதி யூக்கத்துடன் வளர்க்கக் கடவர். இவ்விதம் சுதர்மத்தை வளர்க்காது கைவிட்டுக் கற்ற கல்வியும் பெற்றபுகழும் அடைந்த செல்வமும் மங்கல நாணிழந்த மங்கையின் பேரழகையும் யௌவனத்தையும் ஆடையாபரணங்களையுமே நிகர்க்கும்.

நிற்க, மற்றொரு பகுதியினர் தங்கள் சமயக் கொள்கைகளையும் சாத்திரங்களையும் ஓதி யுணர்ந்து அவை காட்டும் நெறியில் ஒழுக வேண்டுமென்னும் ஆர்வம் மிக்குடையோராயிருக்கின்றார்கள். ஆயினும் குடும்பத் தொல்லையினால் அவைகளை ஓதப் போதியகாலம் கிடைக்கப் பெறாதவர்களாயிருக்கின்றார்கள். அத்தகையோரைப் பொருட்படுத்திப் பொருளுதவியை விரும்பாது ஓதுவிப்பவர் ஏகதேசமாயுளரென்றாலும், கற்க விரும்புவோர் அவரை யறிந்து அவரி

டஞ் சென்று ஓதியுணர்கின்றாரில்லை. ஆதலால் இவர்களும் சமய வுணர்ச்சி யில்லாதவர்களாகவே வாழ்கின்றார்கள்.

இவ்விதமாகப் பொருளுடையோரும் பொருளில்லோரும் முறையே தங்களிடம் பொருளுண்மையும் பொருளின்மையுமே காரணமாக வீணே காலத்தைப் போக்குகிறார்கள்.

சமயாதீதப் பழம்பொருளைக் கைவந்திட மன்றுள் வெளிகாட்டி முத்திதரும் தெய்வ சபையையும் காட்டுவதாகிய சமயம் சைவசமயமே என்னும் ஆன்றோர்கட்டுரையை அறியாமையினாலும் அறிவிப்பாரின்மையாலும் நம்மவரிற் சிலர் தனித்தும் வேறு சிலர் குடும்பத்துடனும் பிற சமயங்களில் புகுகின்றார்கள், இன்னும் சிலர் உயர்குலத்தோரென்று வீண்பெருமை பாராட்டித்திரியும் வன்கண்ணரால் இழிகுலத்தோரென்று புறக்கணிக்கப்பட்டு அவ்விகழ்ச்சியினின்றும் தங்களை ஒருவாறு நீக்கிக்கொள்ளும் பொருட்டுத் தங்கள் குல மக்களுடன் பிறசமயப் பிரவேசம் பண்ணுகிறார்கள். இன்னும் சிலர் சிவாலயங்களுக்குச் செல்லாது முகமதிய மசூதிகளுக்கும் கவர்க்குழிகளுக்கும் போய்த் தொழுதும் காணிக்கை செலுத்தியும் அங்கே கொடுக்கப்படுகிற சாம்பரை நெற்றியிலணிந்தும் வருகின்றார்கள். இன்னும் வேறு சிலர் பல பேய்த்தேவதைகளை ஏற்படுத்திக் கொண்டு அவற்றிற்கு இசக்கி, மாரி, காட்டேரி, பிடாரி, பேய்ச்சி, வண்டிமலைச்சி, மாடன், கருப்பன், குட்டிச்சாத்தான், பெரியசாத்தான் என்னும் பல பெயர்களைக் கொடுத்து, அவைகளுக்குப் புலாலுண்போருள் கீழ்வகுப்பினரைக்கொண்டு ஆடு, மாடு, கோழிகளைப் பலிசெய்வித்தும், கள் சாராய முதலியவற்றை நிவேதித்தும் இவ்விழிசெய்கைகளால் மீளாநரகிற் காளாகின்றார்கள். அல்லாமலும் அச்சமயங்களில் அக்கீழ்மக்கள் மேற்கூறிய மது மாமிசங்களை மிதமிஞ்சி யுட்கொண்டு நிலைதடுமாறி ஆடிக் குதித்து அருகிலுள்ளோர் திடுக்கிட்டயரும்படி பயங்கரமான கூக்குரலுடன் பிதற்றும் அசம்பாவிதச் சொற்களைத் தெய்வ வாக்காகக் கருதி அவ்வன்கண்ணரைத் தங்கள் மனைவிமக்க

ரூடன் அஞ்சலி வந்தனஞ்செய்து, அவர்களது அனுசாரக் கரங்களால் தீண்டப்பெற்று நெற்றியில் சாம்பரும் தரிக் கப் பெறுகின்றார்கள். நம்மனோரது இத்தகைய இழிய செய்கைகளைப் பார்க்குந்தோறும் நினைக்குந்தோறும் கேட் குந்தோறும் எம் நெஞ்சம் துடித்தயருகின்றது. மேற் கூறிய காரணங்களினால் நமது சமயத்தின் ஆற்றல் நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வருகிறது.

மேற்கூறிய பெருங் குறைகளையகற்றிச் சமயவுணர்ச்சி தழைத்தோங்குமாறு செய்வது மூதறிஞருக்கு மட்டுமே யன்றிச் சமானியருக்கும் பொதுவான ஒரு கடமையாகும் என்னு மூணர்ச்சி சாமானிய அறிவினையுடைய அடியேனது உள்ளத்திற்றோன்றி இருட்டறையிலிருந்த வென்னை ஈர்த்து வெளியே தள்ளியது. இவ்விதம் தள்ளப்பட்ட தமியேன் என்னால் ஒல்லும் வகையால் சைவ சமயப் பணியாகிய மகத்தான அறவினையை ஓவாது செல்லும் வாயிற் செய் வான் உன்னி, இக் காலத்திற்கேற்பச் சைவ சமயக்கொள் கைகளையும் சைவ சமயாசாரங்களையும் சைவப் பெரியா ரது திவ்ய சரித்திரங்களையும் எளிய வசன நடையிலெழுதி அச்சிட்டு வெளியிடப் பேரவாவுற்றேன். அன்றியும் அரிய பல அற்புதங்களை நிகழ்த்தியதாய் விளங்கும் மேற்கூறிய தமிழ் வேதங்களாம் தேவார திருவாசகங்களும் மற்று முள்ள திருவிசைப்பா முதலிய திருவருட்பாக்களும் இக் காலத்துக்கு மிக விரிவாயும் ஆழ்ந்த கருத்துகளை யுடையன வாயும் இருத்தல்பற்றி அவற்றை முற்றிலும் ஓதியுணர்ந்து பயனடைவது பெரும்பான்மையோருக்கு அசாத்தியமா யிருக்கிறது. ஆதலால் அச்செய்யுட்களில் எளிதில் பொருள் விளங்கக் கூடியனவாயும் ஒவ்வொருவரும் அவசியம் ஓதியு ணர வேண்டிய பொருள்களை யுடையனவாயும் என்போலிக ளது கன்னெஞ்சையும் உருக்க வல்லனவாயுமுள்ள ஆயிரத் தெட்டுத் திருப்பாசுரங்களைத் திரட்டியும் அரும்பத விளக்கத்துடன் அச்சிட்டு வெளியிடுவதாகக் கருதி, கருதிய வாற்றினில் திருவருளை முன்னிட்டுத் தொடங்கி, சைவத்

துக்கு ஒரு திலகமாய் விளங்கிய திலகவதியாரென்னும் அருந்தவச் செல்வியாரின் தம்பியாராகிய திருநாவுக்கரசு நாயனார் தமிழ் நாட்டுக்கு ஒரு திலகமாய் விளங்கும் திருவாரூரிற் பாடியருளிய தேவாரப் பதிகங்களுக்குத் திலகமெனத் தரும் திருவாரூர் போற்றித் திருத்தாண்டகத்தினை சிவார்ச்சனைத் திருமந்திரமென்னும் பெயருடன் முதன் முறையாக வெளியிட்டுள்ளேன்.

இத்திருப்பாசுரங்களை ஆடவர் பெண்டிர் சிறுவர் சிறுமியர் ஆகிய ஒவ்வொருவரும் நியமமாய் மனனஞ்செய்து அவற்றின் பொருள்களைக் கூடியவரையில் தாமாகவே ஊகித்தறிந்தும் தாமாக அறியமுடியாத விடங்களில் தக்கார்வாய்க்கேட்டும் வாய்ப்பாடம் பண்ணிக்கொண்டு பிரதிதினமும் அதிகாலையில் அநுட்டான முடிந்தவுடன், பசுவின்சாணத்தினால் மெழுகப்பட்டுக் காய்ந்ததும் நல்ல வெளிச்சமுள்ளதுமான ஓரிடத்தில் வடக்கு முகமாகவேனும் கிழக்கு முகமாகவேனும் சம்மணங்கூட்டி நிமிர்ந்துட்கார்ந்து உச்சசுரத்தில் ஓதக்கடவர்.

இப்பணியைச் செவ்வனே நிகழ்த்தும் ஆற்றல் தமியேனிடத்தின்மையை நோக்கி முதறிஞர் இகழாமையை வேண்டுகின்றேன்.

அடியார்தம் அடியார்க் கடிமை

**திருநெல்வேலி - பரமசிவன்.**

உ

சிவமயம்

# சிவார்ச்சனைத்

# திருமந்திரம்



## திருச்சிற்றம்பலம்

சிவாய நமவெனச் சித்த மொருக்கி
அவாய மறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க வானந்த மாமே —[திருமூலர் திருமந்திரம்]

## திருச்சிற்றம்பலம்

சிவார்ச்சனைத் திருமந்திரம்:—அதாவது சிவனை அருச்சிக்கும் திருமந்திரம். இத்திருமந்திரம் தமிழ் வேதமாகிய தேவாரத்துள் திருவாரூர் போற்றித் திருத்தாண்டகத்தைக் குறிக்கும். இத்திருத்தாண்டகத்தில் சிவபெருமானை நூற்றெட்டுமுறை போற்றிப் பாடியுள்ளது. ஆகலின், இது சிவனை அருச்சித்தற்காம் தகுதி வாய்ந்த திருமந்திரமாயிற்று. மந்திரம் என்னும் பதம் (தன்னை) நினைப்பவரைக் காப்பது (மந்- மநநம், திரம்-காப்பது) எனப் பொருள் படும். இத்திருத்தாண்டகத்தை வாயினால் உச்சசுரத்திற் பாடி, இதில் ஆழ்ந்து கிடக்கும் அரிய பெரிய விடயங்களின் கருத்துகளை மனத்தினாற் சிந்தித்துக் கையினால் நாண்மலர் கொண்டு அருச்சிப்பவர் கடுநரகில் வீழாது

காக்கப்படுவர் என்னும் துணிபுபற்றி இது சிவார்ச்சனைத் திருமந்திரம் எனப்பட்டது. இதற்குப்பிரமாணம்:—

பத்தரோடு பலரும் பொலிய
மலரங் கைப்புனல் தூவி
ஒத்தசொல்லி யுலகத் தவர்தாந்
தொழுதேத்த வுயர் சென்னி
மத்தம்வைத்த பெருமான் பிரியா
துறைகின்ற வலி தாயம் †
சித்தம்வைத்த வடியா ரவர்மே
லடையா மற்றிடர் நோயே [சம்பந்தர்]

சிவபூசை செய்வோருள் சிவாஷ்டோத்திர சதநாமங்களைப் பொருளுணர்ந்து பிழையின்றித் திருத்தமாய் உச்சரிக்க இயலாதவர்கள் இதனை ஓதி அருச்சிக்கக் கடவர். ஏனையோர் சிவாலயத்தில் சிவபெருமானுக்கு அருச்சகரைக் கொண்டு அருச்சனை செய்விக்குங் காலத்தில் ஓதக்கடவர்.

இதனைச் சைவசமயாசாரியர் நால்வரில் ஒருவராகிய திருநாவுக்கரசு நாயனார், திருத்தொண்டருடன் திருவாரூர்த் திருப்பதிக்குச் சென்று, அங்குள்ள திருக்கோயிலை அடைந்து, ஆயிரக்கால் மண்டபத்தின் முன்வந்து வணங்கி, திருமாளிகை வாயிலிற்புகுந்து, புற்றிடங் கொண்டாரை நேரில் தரிசித்து, ஆனந்த பரவசராகிக் கண்ணீர் சொரிந்து தியாகேசப் பெருமானது திருவடியில் விழுந்து போற்றிப் பாடியருளினர்.

---

† திருவலிதாயம் என்னும் தலம் இப்போது 'பாடி' என வழங்கும்.

சிவமயம்

# திருவாரூர் போற்றித் திருத்தாண்டகம்

---

திருவாரூர் (திரு ஆர் ஊர்) இலக்குமி தேவியானவள் இருந்து தவம்புரிந்த (சிவபெருமானைப் பூசித்த) தலம். * இத்தலம் தன்னிடம் பிறந்தார்க்கு முத்தியளிப்பது. இவ் வூரிலுள்ள ஆலயம் **திருமூலட்டானம்** எனப்படும். அவ்வால யத்திலுள்ள ஆயிரக்கால் மண்டபம் **தேவாசிரியன்** எனப் படும். அங்குள்ள திருக்குளம் **கமலாலயம்** எனப்படும்.

**இலக்குமிதேவி சிவபெருமானைப் பூசித்த கதை:—**

ஆதியில் திருமால் மூவுலகினையும் அழகில் வெல்லத் தக்க ஒரு புதல்வனைப்பெற விரும்பித் திருப்பாற்கடலில் அநந்தசயனத்தின்கண் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய் தார். அவ்விதம் தவஞ்செய்த அவர்முன் சிவபெருமான் தோன்றி அவர் வேண்டிய வரத்தை ஈந்தார். அப்போது அருகிலிருந்த பார்வதி தேவியார், தம்மைத் திருமால் வணங் காததால் சினந்து, இவரால் பெறப்படும் பேரழகினை யுடைய புதல்வன் பின்னர் அச்சிவபெருமானது கோபத் திற்காளாகி அவரது நெற்றிக்கண்ணினின்றும் வெளியாகும் அக்கினியினால் எரிக்கப்பட்டுச் சாம்பராகக் கடவன்" எனச் சபித்தார். அதனையறிந்த திருமகள் மனம் வருந்திச் சிவ பெருமானையும் பிராட்டியாரையும் வணங்கி, அப்புத்திரன் இறந்தாலும் மறுபடியும் உயிர்பெற்று வாழ்ந்திருக்க வரந்தர வேண்டுமென்று பிரார்த்தித்து, அவ்வரத்தினைப் பெற்றனள்.

---

* திருவாரூரிற் பிறக்க முத்தி, திருத்தில்லையைத் தரிசிக்க முத்தி, திருவண்ணாமலையை நினைக்க முத்தி, காசியில் இறக்க முத்தி என்பது மூதுரை.

பின்னர் பார்வதிதேவியாரது சாபப்படி மன்மதன் இறந்த போது திருமகள் திருவாரூரை அடைந்து புற்றிடங்கொண்டாரைப் பூசித்து இறைவன் திருவருளால் மன்மதன் உயிர் பெற்றெழக்கண்டு மகிழ்ந்தாள் என்பதாம்.

திருச்சிற்றம்பலம்.

க. கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி
அல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்று மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

குறிப்புரை:—கற்றவர்கள் உண்ணும் கனி - சிவபுராணம் சிவனடியார் பிரபாவம் முதலிய புண்ணியக் கதைகளையும், தேவாராதி தோத்திர நூல்களையும் சிவஞான போதாதி சாத்திர நூல்களையும், இன்னும் திருக்குறள் முதலிய ஞான நூல்களையும் கற்குமுறையிற் கசடறக்கற்று கற்றவாறு ஒழுகுவோர் அனுபவிக்கும் பேரின்பக்கனி. இதனை,

முற்றலாமையிள நாகமொடேன
முளைக்கொம் பவைபூண்டு
வற்றலோடுகல னாப்பலிதேர்ந்தென
துள்ளங்கவர் கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல்
கையாற் றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய
பெம்மா னிவனன்றே [சம்பந்தர்]

மற்றுப்பற்றெனக் கின்றிநின் திருப்
பாதமேமனம் பாவித்தேன்

பெற்றலும்பிறந் தேனினிப்பிற
வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லு(ம்)நா நமச்சிவாயவே [சுந்தரர்]

கற்றவர்விழுங் குங் கற்பகக்கனியைக்
கரையிலாக் கருணைமாகடலை
மற்றவரறியா மாணிக்கமலையை
மதிப்பவர் மனமணிவிளக்கைச்
செற்றவர்புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண்டுள்ளங்
குளிரவென் கண்குளிர்ந்தனவே [சேந்தனார்]

என்னும் திருப்பாசுரங்களால் அறிதல் கூடும். கழல் - திருவடி. கதி-பதவி. அற்றவர் - யான் எனது என்னும் அகப்பற்று புறப்பற்றுகளை ஒழித்தவர். ஆர் அமுதம் - நிறைந்த தேவாமிருதம் (சாவா மருந்து). அல்லல்-பிறவித் துன்பம். மைந்தன் - வலிமையுடைய புருடன். செற்றவர் - பகைவர். புரம்- திரிபுரம். * போற்றி - துதி.

செற்றவர் புரமெரித்தது:—

மாயைபெற்ற புதல்வனாகிய தாரகாசுரன் குமாரக்கடவுளாற் கொல்லப்பட்ட பிறகு, அவ்வசுரனது புதல்வர்களான தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்னும் மூவரும் சமபல முடையவர்களும், இந்திரியங்களைச் செயித்தவர்

* மும்மதில்:—இருப்புமதில், வெள்ளிமதில், பொன்மதில்.

களும், உலகினைவெல்ல விரும்பினவர்களும், சமதமாதி குண சம்பூந்திகளும், சத்தியவசனர்களுமாய் மேருமலையை யடைந்து பெரிய தவத்தைச் செய்தார்கள். அப்போது பிரமதேவர் அவர்களது அருந்தவத்துக்கிரங்கிப் பிரசன்னமாகி அவர்களை நோக்கி, "நீங்கள் யாதுகருதித் தவஞ்செய்கின்றீர்கள்?" என்று வினவலும், அவ்வசுரர் மூவரும் அவரைப் பணிந்து கைகட்டி நின்று, "கடவுளே! எங்களுக்குச் சர்வப்பிராணிகளிலும் ஒன்றாலேனும் இறவா வரத்தினை அளிக்கவேண்டும்" என்று வேண்டினார்கள். அதற்குப் பிரமதேவர், "இறவாதிருப்போர் ஒருவருமிலர். கற்பகாலங் கழியின் யானும் இந்திராதி தேவர்களும் திருமாலும் இறப்போம். ஈசன் ஒருவனே இறவாதவன். † ஆதலின், அதனையன்றி வேறு வரம் யாதாமொன்றைக் கேளுங்கள்" என்ன, அசுரர் ஆலோசித்து, "அண்ணலே! அடியேங்கட்குச் சத்துருக்களால் செயித்தற்கு அசாத்தியமானவையும், தேவர்களாலும் அழிக்க முடியாதவையும், சுகத்தைக் கொடுக்கத்தக்கவையும், எண்ணிய இடத்திற்கு எளிதிற்செல்லும் வலிமையுடையவையுமான பொன், வெள்ளி, இரும்புகளாலாகிய மூன்று பட்டணங்கள் வேண்டும். அம்முப்புரங்களும் பூமி அந்தர சுவர்க்கமென்னும் திரிலோகங்களிலும் சஞ்சரித்து ஆயிர வருடத்திற்கு ஒருமுறை ஒன்று சேர்வதும், மீண்டும் விரும்பிய இடத்திற்குச் செல்வதுமாயிருத்தல் வேண்டும். அவ்வாறு அம்மூன்றும் ஒன்றுகூடி

---

† நூறுகோடி பிரமர்கள் நொங்கினார்
ஆறுகோடி நாராயண ரங்ஙனே
ஏறுகங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறிலாதவன் ஈசனொருவனே"—திருநாவுக்கரசு நாயனார் திருக்குறுந்தொகை.

யிருக்குஞ் சமயத்தில் அம்மூன்றையும் ஒரே அம்பினால் அழிக்கவல்ல சுத்தவீரன் ஒருவனிருந்தால் அவனால் மழை காலத்தில் சந்திரன் பூச நட்சத்திரத்துடன் கூடியிருக்கும் முகூர்த்தத்தில் (தைப்பூசத்தன்று) அம்முப்புரங்களும் அழிவை யடையவும், அதனால் நாங்கள் மூவரும் இறக்கவும், வேறொருவராலும் இறவாதிருக்கவும் வரந்தரவேண்டும்'' என்று பிரார்த்தித்தார்கள். பிரமதேவர், ''அவ்வண்ணமே யாகுக'' என்றுரைத்துத் தம்முலகம் சென்றார். பிறகு மயனென்னும் அசுரத்தச்சன் பிரமதேவர் கட்டளைப்படி காஞ்சனபுரி இரசிதபுரி, ஆயசபுரி என மூன்று பட்டணங்களை நிருமித்து அவற்றுள் * காஞ்சனபுரியைச் சுவர்க்கத்திலும், † இரசிதபுரியை மத்தியத்திலும், ‡ ஆயசபுரியைப் பூமியிலும் சஞ்சரிக்கத் தக்கதாகச் சூத்திரம் வைத்து அவற்றை முறையே தாராகாக்ஷன் முதலிய மூவருக்கும் கொடுத்தான். [தவஞ் செய்தலால் வருவதாகிய வல்லமையை அடைந்தவர்க்கு இயமனைக் கடத்தலும் எளிதென்றால், திரபுராதியர் பெற்ற வரம் அரியதெனப் போற்றத்தக்க தன்று என்பது இங்கு குறிக்கத் தக்கது.

கூற்றங் குதித்தலுங் கைகூடு(ம்) நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு [திருக்குறள்]

கூற்றங் குதித்தலுக்குச் சான்றாவார் மார்க்கண்டேயர் என்னும் வாலிய தவசியாவார். அவரது சரிதம் பின்னர்க் காண்க.]

தாரகாக்ஷன் முதலாயினார் தாங்கள் பெற்ற அருந்தவச் செல்வத்தினால் இறுமாப்படைந்து தெய்வத்தை மறந்து

---

* காஞ்சனம் - பொன். † இரஜிதம் - வெள்ளி ‡ ஆயசம் - இரும்பு. திரிபுரம் - திரிகின்றபுரம். 'திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரான்' என்றார் திருமூலர்.

நன்னெறியினின்றும் வழுவினவர்களாகி அளவிறந்த அவு ணச் சேனையுடன் திரிபுரங்களிற் சென்று வைகுண்ட முத லிய தேவ நகரங்களையும், பூலோகத்திலுள்ள பல பட்டினங் களையும் சிதைத்து அங்குள்ள அநேக கோடி சீவராசிகளை யும் அழித்து வந்தார்கள். தேவர்கள் அவ்வசுரர்களுடைய இத்தகைய கொடிய செய்கையைச் சகிக்க முடியாதவர்களாய் விட்டுணு மூர்த்தியுடன் சிவபெருமானிடஞ் சென்று வணங் கி, பின், "எங்கள் பதியே! திரிபுர வாசிகள் இறக்குந் தன்மையுள்ள எவராலும் எப்பிராணியாலும் இறவாதிருக்க வரம்பெற்றிருத்தலின், அவர்களை அழிக்கும் ஆற்றல் தேவரீருக்கன்றி வேறெவர்க்கும் இல்லையாதலால் தேவரீரே அவ்வவுணப் பதகரைத் திரிபுரங்களோடழித்து அடியேங் களை இரட்சித்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். பரமகருணாநிதியாகிய சிவபெருமான் அவர்களது வேண்டு கோளுக்கிரங்கி, "அவ்வாறே செய்வோம்" என விடை யளித் தனுப்பினார். பின்னர் அவருடைய ஆக்கினையின்படி விசுவகர்மாவென்னுந் தேவதச்சன் * பதினான்கு உலகங்களை யும் ஒரு திவ்யரதமாய் நிருமித்தான். சூரிய சந்திரர்கள் அவ் விரதத்தின் சக்கரங்களாயினர். பிரமதேவர் சாரதியானார். வேதங்கள் நான்கும் நான்கு குதிரைகளாயின. பிரணவ மந்திரம் குதிரை செலுத்துங் கோலாயிற்று. இவ்வாறு ஆயத்தஞ் செய்யப்பட்ட தேரின் மேல் சிவபெருமான் பார்

---

* பதினான்கு உலகங்களாவன:—பூலோகம், புவலோகம் சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்திய லோகம் என மேலுலகேழும், அதலம், விதலம், சுதலம், தராதலம் இரசாதலம், மகாதலம், பாதாளம், எனக் கீழுலகேழுமாம்.

வதி தேவியாருடன் யுத்த சந்நத்தராய் ஏறினர். † அப்போது மேருமலை வாசுகி யென்னும் பாம்பினை நாணகக்கொண்ட ஓர் அற்புத வில்லாக அவரது இடக்கரத்தில் அமர்ந்தது. விட்டுணுவானவர் அக்கினி தேவரைக் கூராகவும் வாயுதேவரை ஈர்க்காகவுங் கொண்ட ஓர் அற்புத அம்பாக அவரது வலக்கரத்தில் அமர்ந்தார். சிவபெருமான் ஆரோகணித்தலும் தோனது திரிபுரத்தை நோக்கிச் சென்றது. அத்தேர் செல்லுகையில் அதனை உலகத்தைத் தாங்கும் கூர்ம ரூபியான நாராயணன் இடபரூபம் வகித்துத் தாங்கினர். ‡ திரிபுரத்தைச் சமீபித்தலும் சிவபிரான் $ வில்லை வளைத்தனர். அப்போழுது திரிபுரங்கள் மூன்றும் ஒன்று சேர்ந்து சரற்காலத்துச் சந்திரபுஷ்ய நக்ஷத்திரமா யிருந்தது. சிவபெருமான் தமது கையிலிருந்த ஓரம்பைப் பிரயோகிக்கச்

---

† குன்றவார்சிலை நாணராவரி வாளிகூரெரி காற்றின்மும்மதில்
வென்றவா றெங்ஙனே விடையேறும் வேதியனே
தென்றலார்மணி மாடமாளிகை சூளிகைக்கெதிர் நீண்ட (பெண்ணைமேல்
அன்றில்வந் தணையும் ஆமாத்து ரம்மானே—

திருஞான சம்பந்தர் தேவாரம்.

கல்லானிழற் கீழாயிடர் காவாயென வானோர்
எல்லாமொரு தேராயயன் மறைபூட்டிநின் றுய்ப்ப
வல்லாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல்
வில்லாவெயி லெய்தானிடம் வீழிம்மிழ லையே—

திருஞான சம்பந்தர் தேவாரம்.

‡ கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேறாதே
இடபமுகந் தேறியவா றெனக்கறிய வியம்பேடீ
தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த வந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் றிருமால்காண் சாழலோ—திருவாசகம்.

$ வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற—திருவாசகம்.

பெண்ணை - பனை.

சித்தமானார். அப்பொழுது போர்க் கருவிகளாக அமைந்திருந்த ஒவ்வொருவரும் தம்மாலேயே திரிபுர தகனம் நிகழ்வதாக இறுமாப்படைந்தனர். அதனை யுணர்ந்த சிவபெருமான் பாணத்தைப் ‡ பிரயோகியாது புன்னகை செய்தார். அப்போது அவர் வாயினின்றும் வெளிவந்த அக்கினியினால் முப்புரங்கள் எரிந்து சாம்பராயின - என்பதாம்.

குறிப்பு:—ஆலயங்களில் பிரமோற்சவ காலத்தில் நடைபெறும் இரதோற்சவம் (தேரோட்டம்) இந்த ஐதிகத்தினையே குறிக்கும் என்றறிக.

௨. வங்கமலி கடனஞ்ச முண்டாய் போற்றி
மதயானை யீருரிவை போர்த்தாய் போற்றி
கொங்கலரு (ம்) நறுங்கொன்றைத் தாராய் போற்றி
கொல்புலித் தோலாடைக் குழகா போற்றி
அங்கணனே யமரர்கடம் மிறைவா போற்றி
ஆலமர நீழலறஞ் சொன்னாய் போற்றி
செங்கனகத் தனிக்குன்றே சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

குறிப்புரை:—வங்கம் - மரக்கலம், கப்பல். ஈருரிவை ஈரத்தோடு உரிக்கப்பட்டதோல். கொங்கு-பூந்தாது. நறுங் கொன்றைத்தார் - வாசனையுடைய கொன்றைப் பூமாலை. குழகன் - அழகன். அங்கணன் - அழகிய கண்ணையுடையவன், (கண்ணோட்டம்) கிருபா நோக்கமுடையவன். அமரர் - மரணமில்லாதவர், தேவர். இறைவன் - அரசன். கனகம் - பொன்.

---

‡ ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தம்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை உந்தீபற—திருவாசகம்

சிவபெருமான் நஞ்சமுண்டது:—முன்னொரு காலத்தில் தேவர்களும் அசுரர்களும் தம்முட் பகைகொண்டு போர் செய்ய, இருதிறத்தாருள்ளும் அநேகர் இறந்தனர். எஞ்சியோர் நெடுநாள் அழியாமலிருந்து போர்செய்யக்கருதிப் பிரமதேவரையடைந்து தங்களுக்குச் சாவாமருந்தாகிய அமிருதத்தைத் தரவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். பிரமதேவர் அவர்களுடன் திருமாலிடஞ் சென்று அவர்களது வேண்டுகோளைத் தெரிவித்தார்.

திருமால் அவர்களது விண்ணப்பத்துக்கிணங்கி, பாற்கடலில் மந்தரகிரியை மத்தாக நிறுத்தி, சந்திரனைத் தூணாயமைத்து, வாசுகியென்னும் பாம்பைக் கயிறாகப் பிணைத்துக் கடையும்படி ஆக்கினை செய்தார். பின் தாம் ஆமையுருக்கொண்டு மத்தின் அடியையும் முடியையும் முறையே தமது முதுகினாலும் கரத்தினாலும் தாங்கி நின்றனர். வாசுகியாகிய கயிற்றைச் சுரர் ஒரு புறமும் அசுரர் ஒரு புறமுமாகப் பிடித்துக்கடைந்தார்கள். அவ்வாறு கடைந்தபோது, வாசுகி வருத்தம் பொறாது நஞ்சைக் கக்க, அந்நஞ்சு உலக முழுதும் பரவியது. அதனைக் கண்ணுற்று எல்லோரும் பயந்து வருந்தினர். அப்போது திருமால் அவர்களுடன் கயிலைக்குச் சென்று நிகழ்ந்ததைப் பரமசிவனிடம் விண்ணப்பஞ் செய்தார். சிவபெருமானுடைய ஆக்கினைப்படி அவர் பக்கத்திலிருந்த ஆலாலசுந்தரர் அந்நஞ்சைத் திரட்டிக் கொண்டுவந்துதவ, எம்பிரானார் அதனை ஒரு திவலையாக்கி உட்கொண்டு தமது திருமிடற்றில் நிறுத்தினார். அதனால் அவர் காளகண்டர் என்னும் பெயரையடைந்தார். பின்பு திருமால் முதலியோர் பாற்கடலை மறுபடியும் கடைந்து அமுதத்தைப் பெற்றார்கள் என்பதாம்.

குறிப்பு.— ஏகாதசி யன்று உபவாசம் (உணவின்றி யிருத்தல்) செய்து இரவில் கண்ணுறக்கமின்றி விழித்திருந்து பகலும் இரவும் இடைவிடாது சிவத்தியானம் செய்தல், வாசுகியென்னும் பாம்பு கக்கிய நஞ்சானது உலக முழுமையும் பரவிய காலத்தில் தேவர்களும் அசுரர்களும் ஏனையோரும் இருந்த நிலைமையையும், துவாதசியன்று காலையில் பாரணை (உபவாசமிருந்துண்ணல்) செய்தல், தேவர்கள் அமிர்தம் புசித்ததையும், திரயோதசியன்று மாலையில் பிரதோஷ காலத்தில் சிவபெருமானைத் தரிசித்தல், அமிர்தமுண்டு இபயத்தை ஒழித்த தேவர்கள் எம்பெருமானை மீண்டும் வணங்கி நன்றி கூறித் துதித்ததையும், பிரதோஷ காலத்தில் அடியார்கள் பிரகாரத்தில், வலமாகச் சென்று சண்டேசுரரை வணங்கி மீண்டு சிவசந்நிதானத்தை அடைந்து பின் இடமாகச் சென்று சண்டேசுரரை வணங்கி மீண்டு, இவ்விதமாக வலமும் இடமுமாகத் திரிதல், நஞ்சினை அஞ்சியோடிய தேவர்களும் அசுரர்களும் சென்ற விடங்களிலெல்லாம் நஞ்சினால் தாக்கப் பட்டுத் திரிந்ததையும் குறிக்கும் என்றறிக.

சிவபெருமான் மதயானையின் தோல் போர்த்தது:—

முன்னொருகாலத்தில் கயாசுரனென்ற ஒரு கொடிய துட்டனிருந்தான். அவன் பிரமாவை நோக்கித் தவஞ்செய்து, சிவபெருமானையன்றி வேறு யாவரும் தன்னை வெல்லா திருக்கத்தக்க மிகுந்த வலிமையைப்பெற்று, பிரமவிட்டுணுக்களைப் போரிலே வென்று, மற்றைத் தேவர்களையும் முனிபுங்கவர்களையும் உலகத்திலுள்ள சகல பிராணிகளையும் வருத்திக்கொண்டு வந்து கடைசியாகக் காசி நகரத்தை அடைந்தான். அப்போது அந்த நகர மாந்தர்கள்

அவனைக்கண்டு அஞ்சியோடி விசுவநாதர் ஆலயத்தை அடைந்து முறையிட்டார்கள். விசுவநாதர் அவர்களது முறையீட்டுக் கிரங்கி, யானை உருவந்தாங்கிய அந்த அவுணனைக் கொன்று, அவனால் இடருற்ற தேவர்களையும் முனிவர்களையும் ஏனைய உயிர்களையும் காப்பாற்றி அவ்வாறு தாம் செய்த செய்கையை எல்லோரும் அறிந்து அச்சமொழிந்து இன்புறுமாறு, கொல்லப்பட்ட அந்த யானையின் தோலை உரித்துப் போர்த்தருளினார் என்பதாம்.

## சிவபெருமான் புலித்தோலாடை புனைந்தது:—

ஆதியில் தாருகாவனத்தில் தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர்கள் தங்கள் தவமுதிர்ச்சியினால் தருக்குற்றுச் சிவபெருமானை முற்றிலும் மறந்து இறுமாந்திருந்தனர். அவர்களுடைய மனைவியரும் தங்கள் கணவரைப் போலவே கடவுள் வழிபாட்டைக் கைவிட்டுத் தங்களினும் கற்பிற் சிறந்தார் இலரென்று செருக்குற்றிருந்தார்கள். அன்னார் செருக்கை அடக்குமாறும், தம்மிடத்தன்பிலார் செய்யும் புண்ணியச் செயல்களும் பாவச்செயல்களாகவே முடியுமென்பதை அம்முனிவர்களேயன்றி ஏனையோரும் உணர்ந்து தம்மை வழிபட்டு உய்யுமாறும் சிவபெருமான் திருவுளங்கொண்டு, திருமாலை மோகினி யுருவெடுத்துச் சென்று அம்முனிவர்களை மயக்கி அவர்களுடைய தவத்தை அழித்து வரும்படியேவி, தாம் ஓர் யௌவன சுந்தரபுருட னுருக்கொண்டு ஒருகையிற் சூலமும் மற்றொருகையிற் பிச்சைப் பாத்திரமுமேந்தி அம்முனிவர் பத்தினிகளிடம் சென்றனர். காளை வடிவங் கொண்டு வந்த எம்பெருமானது பேரழகைக்கண்ட மாதர்கள் ஒவ்வொருவரும் அவர்மேல் காமுற்றுத் தொடர, சிவபெருமான் அவர்களுடன் முனிவரிருந்த இடத்தை நோக்கிச்

சென்று, அங்கு முன்னர் மோகினியாய்ச் சென்ற மாயவரை யும் அவர் தாங்கி நின்ற பெண்ணுருவின் பேரழகைக்கண்டு காமவிகார மடைந்து தங்கள் உன்னதத் தவநிலையினின்றும் தவறி அவரைத் தொடர்ந்த அம்முனிவர்களையும் சந்தித் தார். அப்பொழுது இருடியர் காளையுருக்கொண்டு நின்ற கடவுளரையும் கற்பு நிலைதவறி நின்ற தங்கள் பன்னியரையும் கண்டு நாணமடைந்து, நிகழ்ந்ததெல்லாம் சிவபெருமானது திருவிளையாட்டென்பதை அறிந்தும் தாங்கள்கொண்ட இறு மாப்பி னின்றும் நீங்காதவர்களாய்ச் சிவபெருமானை மிகவும் வெறுத்து [illegible] அவரைக்கொல்ல நினைத்து ஒருமிகக் கொடிய யாகத்தைச் செய்தார்கள். அப்போது அவ்வேள் வித் தீயினின்றும் ஒருபுலி தோன்றி அம்முனிவர்களது ஆக் ஞைப்படி சிவபெருமானைக் கொல்லும்படி செல்ல, அவர் அப் புலியைக்கொன்று அதன் தோலை ஆடையாகத் தரித்தார். அவ்வேள்வித் தீயினின்றும் முத்தலைச்சூலம், மான், பாம்பு கள், பூதங்கள், நருவெண்டலை, மந்திரரூபமாகிய உடுக்கை, முயலகனென்னும் பூதம் ஆகிய இவைகள் தோன்றின. சிவபெருமான் சூலத்தை ஆயுதமாக ஒருகையிற்பற்றி மானை மற்றொரு கையிலேந்தி, அரவங்களை ஆபரணமாக அணிந்து, பூதங்களைத் தமது சேனையாக்கிக் கொண்டார்; வெண்டலையைச் சிரத்திலணிந்து, உடுக்கையை வேறொரு கையிற்பற்றினர். கடைசியாக முனிவர்கள் வேள்வித் தீயை ஏவினர். சிவபெருமான் வேள்வித்தீயைப் பிறிதோர் கையி லேந்தி, முயலகனை உதைத்துக் கீழே தள்ளித் தமது வலது காலை அவனது முதுகிலூன்றி நின்றனர். அவ்வாறு காலின் கீழ் அகப்பட்ட முயலகன் மெல்ல மெல்ல உடலைத் தூக்கித் தூக்கி பசைதலும், எம்பெருமான் மழு முதலியவைகளைக் கைகளிலேந்தி அரவங்களை ஆபரணமாயணிந்து நின்ற திருக்

கோலத்துடன் சிதாகாசத்தின் கண்ணே என்றும் நீங்காமல் ஆனந்தநிருத்தம் செய்வதுபோல அம்முயலகன் முதுகொடிய நடித்தருளினார். அவர் அவ்வாறு தாண்டவஞ் செய்தலும் சராசரங்கள் யாவும் நடுங்க உலகடங்கலும் மயங்கி வீழ்ந்து அயர்வுற்றது. இறைவர் அதனை புணர்ந்து திருநடமியற்றாது நிற்க, தேவர் முதலியோர் மயக்கத்தினின்றும் நீங்கி அன்போடெழுந்து வணங்கினர். பின்னர் இறைவர் அம் முனிவர்களுக்கும் அவர் பன்னியர்க்கும் நல்லுணர்ச்சியைத் தர, அவர்களும் எழுந்து சிவபெருமானை வணங்கித் தாங்கள் செய்த பெருங் குற்றங்களைப் பொறுத்தருளுமாறு துதித்தனர். தருக்கு மிகுத்துத் தன் தோள்வலியுன்னித் தடவரை (கயிலைமலை)யை வரைக்கைகளால் எடுத்து ஆர்த்த அரக்கனை (இராவணனை) அம்மால் வரைக்கீழ் அடர்த்திட்டு அருள் செய்த கருணையங் கடலாகிய எம்பெருமான் அவர்களுக்கு அருள் செய்தார். என்பதாம்.

குறிப்பு:— ஆலயங்களில் பிரமோற்சவ காலத்தில் நடைபெறும் கங்காள நாதர் (பிச்சாண்டார்) உற்சவம் இந்த ஐதிகத்தினையே குறிக்கும் என்றறிக.

## சிவபெருமான் ஆலமர நிழலில் அறஞ் சொன்னது:—

பார்வதி தேவியார் மலையரையன் மகளாய் அவதரித்துப் பரமசிவனை மணஞ்செய்வதற்காகத் தவஞ்செய்த காலத்தில், ஒருநாள் பிரமதேவர் தமது மானத புத்திரர்களாகிய சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் நால்வரையும் அழைத்துத் தமது படைப்புத் தொழிலை ஏற்றுக் கொள்ளும்படி சொன்னார். அவர்கள் அதற்கு இணங்காமல், "நாங்கள் இந்தப் பாசபந்தத்தில் அகப்பட்டுழலாது சிவபெருமானது திருவடியை அடைந்து பேரின்பக்

கடலில் நிலைத்தாடுவோம்'' என்று சொல்லித் தவஞ்செய்வா ராயினர். பரமசிவன் அவர்களது தவத்துக்கிரங்கி அவர் களுக்குத் தரிசனந் தந்து, 'உங்களுக்கு வேண்டியது யாதென்று' கேட்க, அவர்கள் தங்களுக்கு வேதாகம முடிப் பொருளை உணர்த்த வேண்டிக்கொண்டார்கள். இறைவர் அவர்களுடன் கயிலைமலைச் சிகரத்தின் தென்றிசையில் இருக் கின்ற கல்லாலமரநிழலில் தட்சணாமூர்த்தியாய் எழுந்தருளி அவர்களுக்கு வேதார்த்தங்களை ஓங்கார வாயிலாக உப தேசித்தருளி, பின்னர் சிவாகமத்திற்கூறும் சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் சிவபூசையாதி நான்கு பாத இயல்புகளையும், பதி, பசு, பாசமென்னும் திரிபதார்த்த இலக்கணங்களையும் தெளிவித்தருளினார். கேட்டவர்களாகிய அவர்கள் தாங்கள் தெரிந்துகொண்டு உண்மைப் பொருள் களை அறம், பொருள், இன்பம், வீடென நான்கு பாகு பாட்டில் நான் மறையாக இயற்றினார்கள் என்பதாம்.

குறிப்பு:—மேற்கூறிய நான்கு பாதங்களில் ஞானநிலை யானது சொல்லால் உணர்த்தற்கு உரிய தன்றாதலை நோக்கி மோனமென்பது ஞானவரம்பாகு மாதலால் மோனநிலையே உண்மை நிலையென்று சிவபெருமான் தாமும் மோனநிலையி லிருந்து சனகாதியர்க்கு ஞானநிலையை உணர்த்தியருளி னார் என்றறிக.

௩. மலையான் மடந்தை மணாளா போற்றி
மழவிடையாய் நின்பாதம் போற்றி போற்றி
நிலையாக வென்னெஞ்சி னின்றாய் போற்றி
நெற்றிமே லொற்றைக்கண் ணுடையாய் போற்றி
இலையார்ந்த மூவிலைவே லேந்தீ போற்றி
எழ்கடலு மேழ்பொழிலு மானாய் போற்றி
சிலையாலன் றெயிலெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

**குறிப்புரை:**—மலையான் - இமயமலை யரசன். மடந்தை- பெண்களுக்குரிய பருவங்கள் ஏழிலொன்று; அவை பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண். இவர்க்கு முறையே வயதெல்லை - அ, கக, கரு, கூ, உரு, ௩க, சக என்றறிக. மணாளன் - மணவாளன், நாயகன். மழவு-இளமை. விடை-இடபம், எருது. மூவிலை வேல்-முத்தலைச்சூலம், கடல் ஏழு-உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன். பொழில்-உலகப்பொது. இலை-மேருமலை, எயில்-மதில். சிலையால் எயிலெரித்த சிவன்- செற்றவர்தம் புரமெரித்த சிவன் (முதல் திருப்பாசுரம்.)

சிவபெருமான் மலையான் மடந்தை மணாளனானது:—பூர்வத்தில் பிரமதேவரது புத்திரனான தக்கன் அருந்தவமியற்றி, அத்தவத்தின் பயனாக உமாதேவியாரைப் புத்திரியாராக அடையப்பெற்று அப்புத்திரியாரைச் சிவபெருமானுக்கு விவாகஞ்செய்து கொடுத்தான். தக்கன் இவ்வாறு சிவபெருமானைத் தன் மருகனாகப்பெற்று அதனால் தருக்குற்று அச்சிவபெருமானையே மதியாது இகழ்ந்து அதனால் அவரது கோபத்துக்காளாகி முன் அவரநுக்கிரகத்தால் தான்பெற்ற பெரும் பேறுகளனைத்தையும் ஒருங்கிழந்து வலியுங்குன்றி வறியனாயினான். தக்கனது நிலைமை இதுவாக, அவனிடம் சிலகாலம் வளர்ந்து தாக்ஷாயணி யென்னும் பெயரைப் பெற்றிருந்த உமாதேவியார் சிவபெருமானை வணங்கி, தக்கனால் வளர்க்கப்பட்ட தன் சரீரத்தையும் அவனால் தனக்கிடப்பட்ட பெயரையும் நீக்கியருள வேண்டுமென்று பிரார்த்தித்து, அவரநுக்கிரகத்தால் இமயமலை யரையனிடத்தே ஒரு குழந்தை வடிவாய்ச்சென்று வளர்ந்து ஐந்து வயதாயபின் இறைவனை நோக்கித் தவஞ்செய்து அவரால் மணஞ்செய்து கொள்ளப்பட்டார் என்பதாம்.

உ

**மழவிடையின் வரலாறு:**—முன் ஒரு சர்வசங்கார காலத்தில் பிரமவிட்டுணுக்களும் சகல உயிர்களும் இறப்ப, அண்டங்கள் அழிந்துபட, எல்லா உலகங்களையும் அக்கினி வியாபித்துண்ண, அப்பொழுது உலகமெல்லாம் சுடலையாய்ப் பரிசுத்த முடையதாய்த் தோன்ற, அந்த மகா மயானத்திலே சர்வேசுவரன் பராசத்தி கண்டுகளிக்க நடித்தார். அப்போது தருமதேவதை ஓரழகிய வெள்ளையிடப உருவெடுத்து அவர்முன் சென்று வணங்கி, "என்னை உமது வாகனமாக்கிக் காக்கவேண்டும்" என்று வேண்டியது. அவர் அதற்கு இறவாத தன்மையையும், ஒப்பில்லாத வலிமையையும், அன்பையும், மெய்யுணர்வையும் கொடுத்து, அதனை நோக்கி, "கிருதயுக முதலிய நான்கு யுகங்களிலும் தருமத்தின் தன்மை இதுவென்று யாவரும் அறியும்படி முறையே நான்கும் மூன்றும் இரண்டும் ஒன்றுமாகிய கால்களைப் பூமியில் ஊன்றிச் சஞ்சரிப்பாயாக. உன்னிடத்தில் யாம் எக்காலமும் நீங்காதிருப்போம்" என்று அருளிச்செய்து, அதனை வாகனமாகக் கொண்டார். அந்த நாள் முதலாக எம்பெருமான் தமதடியார்க்கு எருதேறி அருள்புரிவாராயினர். இந்த உண்மையினை,

"எங்கேனு மியாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்
கிங்கேயென் றருள்புரியு மெம்பெருமா னெருதேறிக்
கொங்கேயு மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்துறையும்
சங்கேயொத் தொளிர்மேனிச் சங்கரன்றன் றன்மைகளே"

என்னும் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருவாக்கிற் காண்க. சிவபெருமான் திரிபுரத்தைச் சிரித்தெரித்த சமயத்தில் அருகில் நின்ற விட்டுணுவானவர் அவரை இடபவுருவெடுத்துத் தாங்கினார் என்பதும் ஓர் ஐதிகமாம். இதற்குப் பிரமாணம் முன்னர்க் கூறியுள்ளது.

**மூவிலை வேலின் வரலாறு:**—புலித்தோலாடை புனைந்த கதையிற் காண்க. இவ்வேலின் அடித்தண்டு சிவபெருமானையும், மேற்கவர்கள் மூன்றும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிற் கர்த்தர்களாகிய பிரம விட்டுணுருத்திரர்களையும் குறிக்கும் ஒரு சின்னமாகும்.

ச. பொன்னியலு மேனியனே போற்றி போற்றி
பூதப்ப டையுடையாய் போற்றி போற்றி
மன்னியசீர் மறைநான்கு மானாய் போற்றி
மறியேந்து கையானே போற்றி போற்றி
உன்னுமவர்க் குண்மையனே போற்றி போற்றி
உலகுக் கொருவனே போற்றி போற்றி
சென்னிமிசை வெண்பிறையாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி (ச)

**குறிப்புரை :**—பொன் இயலும் மேனி - பொன்னிறமுடைய உடம்பு, 'பொன்னார் மேனியனே' 'பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்' என்றார் பிறரும். பூதம் - பூதகணம், பேய். படை-சேனை. மன்னியசீர் மறைநான்கு - நிலைபெற்ற (அழியாத) சிறப்பினையுடைய இருக்கு, தைத்திரியம் (யசுர்), சாமம், அதர்வணம் என்னும் மறைப்பொருளாகிய நான்கு வேதங்கள். 'மன்னிய சீர் மறைநாவல் நின்றவூர்ப் பூசல்' என்றார் சுந்தரமூர்த்தி நாயனார். 'மறை நான்குமானாய்' என்றதனால் சிவபெருமானது தற்புருடம் (காத்தல்), அகோரம் (அழித்தல்), வாமம் (விளக்கல்), சத்தியோசாதம் (தோற்றுவித்தல்) என்னும் நான்கு திருமுகங்களினின்றும் முறையே இருக்காதி நான்கு வேதங்களும் பிறந்தமை பெறப்படும். மறி-மான் கன்று. உன்னுதல் - நினைத்தல். உன்னுமவர்க்கு உண்மையன் - நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்குநிற்கும் பொன்

ஞர்சடையைப் புண்ணியன். சென்னி - தலை. பிறை - சந்திரப் பிரபை, வாலசந்திரன்.

பூதப்படையின் வரலாறும் மறியின் வரலாறும் - புலித் தோலாடை புனைந்த கதையிற் காண்க.

பிறையணிந்தது :—சந்திரனுடைய பன்னியர் இருபத்தெழுவரில் கார்த்திகை உரோகிணியென்னும் இருவரும் பேரழகுடையவரா யிருந்தமையால், அவன் அவர்களிடத்தே அதிக மையல்கொண்டு மற்றையரிடம் பராமுகமாயிருந்தான். ஏனைய மிருகசீரிட முதலிய இருபத்தைவரும் தங்களுக்கு நேர்ந்த குறையைத் தங்கள் பிதாவாகிய தக்கனிடம் சொல்லி முறையிடவும், அவன் "சந்திரனுடைய கலைகள் தினமொன்றாகக் குறைந்து ஒளி மழுங்குக" என்று சபித்தான். அச்சாபத்தினால் சந்திரனது கலைகள் பதினாறிற் பதினைந்து தேய, எஞ்சிய ஒருகலையும் தேயுமுன் சந்திரன் சிவபெருமானிடம் சென்று வணங்கித் தனக்கு நேர்ந்த குறையை விண்ணப்பஞ்செய்தான். உடனே அஞ்சியடைந்தவர்க்கு அபயமளிக்கும் கருணைவள்ளலாகிய சிவபெருமான் திருவுளமிரங்கி, அவனது ஒற்றைக் கலையினைத் தமது திருமுடியிற்புனைந்து, அவ்வாறு புனையப்பெற்றகலை நாளுக்கு நாள் வளர்ந்து பதினாறு கலையளவு நிறைந்தும் பின்னர்க் குறைந்தும் பின்னிறைந்தும் மாறிமாறி விளங்கும்படி அநுக்கிரகஞ் செய்தனர் என்பதாம்.

ரு. நஞ்சுடைய கண்டனே போற்றி போற்றி
நற்றவனே நின்பாதம் போற்றி போற்றி
வெஞ்சுடரோன் பல்லிறுத்த வேந்தே போற்றி
வெண்மதியங் கண்ணி விகிர்தா போற்றி

துஞ்சிருளி லாட லுகந்தாய் போற்றி
தூநீறு மெய்க்கணிந்த சோதீ போற்றி
செஞ்சடையாய் நின்பாதம் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி (ரு)

குறிப்புரை:—கண்டம் - கழுத்து, நல்தவன் - புருடோத்தமன், 'நற்றவாவுனை நான் மறக்கினும் சொல்லு(ம்) நா நமச்சிவாயவே' - சுந்தரர் திருவாக்கு. வெஞ்சுடரோன் - சூரியன். இறுத்தல் - ஒடித்தல். மதி - சந்திரன். கண்ணி - தலைக்கொண்டையில் அணியும் பூமாலை. துஞ்சு இருள் - சீவராசிகளனைத்தும் தூங்கும் நள்ளிருள். ஆடல் - நடித்தல். உகத்தல் - விரும்பல். துஞ்சிருளில் ஆடல் - மகா பிரளய காலத்தில் பிரம விட்டுணு சந்திர சூரியாதி தேவர்கள் எல்லோரும் இறந்துபட, உலகங்களனைத்தும் நீரில் மூழ்கியழிய, அப்போது எங்கும் பரவி நிற்கும் பேரிருட்டில் சிவபெருமான் இறந்துபட்ட பிரம விட்டுணுக்களது எலும்புகளாற் கோக்கப்பட்ட மாலைகளை மார்பிலணிந்துகொண்டு பிரமனது மண்டையோட்டினைத் தோண்மேலேந்தி பராசத்தி களிக்க வீணை வாசித்துக்கொண்டு நடம்புரிதல். இதற்குப் பிரமாணம்:—

'பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடன் மூடி யிறக்கு மிறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபர முங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீள நின்றெம்மிறை நல்வீணைவாசிக்குமே' **அப்பர்**

'நங்காய் இதென்ன தவ(ம்) நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடீ
கங்காளம் ஆமா(று)கேள் காலாந்தரத் திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ' - **திருவாசகம்**

[இருவர் என்றது பிரம விட்டுணுக்களை என்றறிக. கங்காளம் - பிரமகபாலம், பிரமனது மண்டையோடு.]
தூநீறு - பரிசுத்தமான திருநீறு, விபூதி.

**வெஞ்சுடரோன் பல்லிறுத்தது:**—தக்கப்பிரசாபதி சிவபெருமானை விலக்கித் தேவர்களோடு யாகஞ்செய்த காலத்தில் வீரபத்திரக் கடவுள் பத்திரகாளியுடன் யாகசாலையுட்சென்று, 'எம்பெருமானுக்குரிய அவியை ஈகுதி' என்றார். தக்கன் மறுத்தான். உடனே வீரபத்திரக்கடவுள் மிகவுங் கோபங்கொண்டு அவியுண்ணும் ஆவலுடன் அவனருகில் வீற்றிருந்த விட்டுணுவின் மார்பில் தண்டாயுதத்தினால் அடித்து, பிரமாவின் சிரசிற்குட்டிக் கீழே தள்ளி, சந்திரனைக் காலால் உதைத்துத் தள்ளி, **சூரியனைக் கதுப்பிலடித்துப் பற்களை உதிர்த்து,** குயிலுருக்கொண்டு ஆகாயத்திற் சென்ற இந்திரனது தோளை வாளினால் வெட்டி அக்கினியின் எழு நாக்குகளையும் அறுத்து, நிருதியைத் தண்டினாலடித்து, வருணனை எழுப்படையினாலடித்து, வாயுவை மழுப்படையினால் அடித்து, தக்கனைத் தண்டித்து, யாகத்தையுஞ் சிதைத்தார் என்பதாம்.

௩. சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி
சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி
பொங்கரவா நின்பாதம் போற்றி போற்றி
புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி
அங்கமலத் தயனோடு மாலுங் காணா
அனலுருவா நின்பாதம் போற்றி போற்றி
செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி (௩)

குறிப்புரை:—சங்கரன் - கிருத்தியம் (பிரபஞ்சத் தொழில்) ஐந்தினுள் ஒன்றாகிய சங்காரத்தைச் செய்பவன். கிருத்தியங்கள் - சிருட்டி (படைத்தல்), திதி (காத்தல்) சங்காரம் (அழித்தல்), திரோபவம் (மறைத்தல்), அனுக்கிரகம் (கிருபை) என்பன. இக் கிருத்தியங்களுக்குக் கருத்தாக்கள் முறையே பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன் என்பவர். அவ் வைவரில் ஒவ்வொருவரும் ஆதியும் அந்தமுமில்லாத அரும் பெருஞ் சோதியாகிய சிவபெருமானுடைய திவ்விய மூர்த்தங்க (உடம்புக) ளாவர் என்றும், அம் மூர்த்தங்களில் உருத்திர மூர்த்தம் சடை, மான், மழு முதலிய சிவச்சின்னங்களைத் தாங்கி நெற்றிக்கண்ணுடைத்தாய் விடையேறிச் சிவனையொத்து விளங்காநிற்கும் என்றுமறிக. பொங்கு அரவம் - கொதித்து (சீறி) எழும் பாம்பு. ஆம் கமலத்து அயன்-அழகிய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன். மால் - விட்டுணு. அனல் - தீ.

அரவம் பூண்ட கதை:—புலித்தோலாடை புனைந்த கதையிற் காண்க.

அயனும் மாலுங்காண அனலுருவாயது:—முன்னொரு காலத்தில் பிரமனும் விட்டுணுவும் நான் பிரமம் நான் பிரமம் என்று போரிட்டனர். அப்போது சிவபெருமான் அவர்களது இறுமாப்பை யடக்கி அவர்களுக்கு நல்லுணர்வை யருளத் திருவுளங்கொண்டு அவர்களுக்கிடையே ஓர் அக்கினிமலையாய்த் தோன்றினார். அவ்வனலுருவைக்கண்டு அவர்களிருவரும் அஞ்சித் தியங்கி நின்றனர். அப்போது சிவபெருமான் அவர்களை நோக்கி, 'இம்மலையினது அடிமுடிகளிலொன்றை எவர் முன்னதாகக் காண வல்லரோ அவரே பரமாவார்' என்றுரைக்க, பிரமன், 'நான்

முடியைக் காண்பேன்' என்று அன்னமாய் பறந்து சென்றும், விட்டுணு, 'நான் அடியைக் காண்பேன்' என்று பன்றியாய்த் தரையைக் கீண்டு கீழ்ச்சென்றும், பலநாள் முயன்றிளைத்துக் காணமுடியாதவராய் இறுமாப்பொழிந்து, சிவபெருமானே பரமனென் றுணர்ந்தார்கள் - என்பதாம். இதனை,

"பங்கயன் முகுந்தனும் பரமென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் துற்றுழி
அங்கவர் வெருவுற வங்கி யாயெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம்"

"பன்றியர் பறவையர் பரிசுடை வடிவொடு படர்தர
அன்றிய வவரவ ரடியொடு முடியவை யறிகிலர்
நின்றிரு புடைபட நெடுவெரி நடுவெயோர் நிகழ்தரச்
சென்றுயர் வெளிபட வருளிய வவர்நகர் சேறையே"

என்னும் கந்தபுராணச் செய்யுளாலும், திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரப் பாசுரத்தாலும் அறிதல் கூடும்.

எ. வம்புலவு கொன்றைச் சடையாய் போற்றி
வான்பிறையும் வாளரவும் வைத்தாய் போற்றி
கொம்பனைய நுண்ணிடையாள் கூறு போற்றி
குரைகழலாற் கூற்றுதைத்த கோவே போற்றி
நம்புமவர்க் கரும்பொருளே போற்றி போற்றி
நால்வேத மாறங்க மானாய் போற்றி
செம்பொனே மரகதமே மணியே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

குறிப்புரை:—வம்பு - வாசனை. வான்பிறை - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் சந்திரன். வாள் அரவு - ஒளியையுடைய சர்ப்பம். கொம்பு அனைய நுண் இடையாள் கூறன் - பூங்

கொம்பை யொத்துத்துவளும் மெல்லியசிற்றிடையினையுடைய உமா தேவியாரைப் பங்கிலுடையவன். குரைகழல் - சப்திக்கின்ற வீரக்கழல், கழல் என்னும்பதம் இங்கு ஆகுபெயராய்க் கழலையணிந்த காலைக்குறித்து நின்றது. கோ - அரசன். வேதம் நான்கு-இருக்காதி நான்கு. வேதாங்கம் ஆறு - மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம். மரகதம் - பச்சைமணி; இது நவமணிகளிலொன்று. நவமணிகளாவன:—கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மாணிக்கம், மரகதம், முத்து, வைடூரியம், வைரம். மணி - முத்து.

கொம்பனைய நுண்ணிடையாள் கூறனாயது:—முன்னொரு கற்பத்தில் பிரமதேவர் பலவுயிர்களையும் படைக்கக் கருதி, முதலில் சனகர் முதலாய நால்வரைப் படைக்க, அவர்கள் ஞானத்தையடைந்து நல்ல தவத்தர்களாயினார்கள், அதன் பின் பிரமதேவரது சிருட்டித் தொழில் [illegible]டைபெறாதாக, அதனால் அவர் மனம் வருந்தி, [illegible] [illegible]த்திரருடன் மகாவிட்டுணுவிடஞ் சென்று தமக்குச் சம்பவித்த குறையைக் கூறி முறையிடவும், திருமாலானவர் பிரமதேவரையும் அவர் புத்திரரையும் அழைத்துக்கொண்டு திருக்கைலாச மலையை அடைந்து சிவபெருமானிடம் விண்ணப்பஞ் செய்தார். எம்பெருமான் விட்டுணுவையும் பிரமாவையும் சனகாதி நால்வரையும் திருநோக்கஞ் செய்து துகளாக வழித்துத் தனித்திருந்து தமது இடது புயத்தை நோக்க, அதினின்றும் உமாதேவியார் தோன்றினார். அவரை அவண் இருத்தி அவருடன் அருணோக்கத்துடன் கலந்து வீற்றிருந்து விட்டுணுவையும் பிரமாவையும் சனகாதி நால்வரையும் உண்டாக்கி, விட்டுணுவை நோக்கி, "நாம் நமது அருட்சத்தியாகிய உமையுடன் சேர்ந்தோம். இனிப் பிரமனது சிருட்டித்தொழில் சரி

வர நடைபெறும்" என்றார். விட்டுணு முதலிய அறுவரும் சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு தங்களிருப்பிடம் சென்றனர் என்பதாம். இதனால் சிவபெருமான் பங்கில் வீற்றிருக்கும் பெண்ணுருவம் அவரது அருட்சத்தியேயா மென்பதும் அப்பெண்ணுடன் அவர் கலந்து வீற்றிருப்பதால் ஆண்பெண்ணாகிய இருபாலாரும் அன்புடன் கலந்து விருத்தியடைந்து அதனால் பிரமாவினுடைய படைப்புத் தொழில் சரியாய் நடைபெறுமென்பதும் பெறப்படும். இதனை,

> "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
> பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
> பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
> விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ."

என்னும் மணிவாசகப் பெருந்தகையின் அருள்வாக்காலும் அறிதல் கூடும்.

கூற்றுதைத்தது: முற்காலத்தில் கடகமென்னும் ஒரு நகரிலே குச்சகரென்னும் பிராமணத் தவசிரேட்டர் ஒருவர் இருந்தார். அவரது புத்திரராகிய கௌச்சிகரென்பவர் பிறவிக்கடலைக் கடக்க வெண்ணி அரிய தவஞ்செய்யுங் காலையில் அவரை ஓர் ஆத்தீண்டு குற்றி என்றெண்ணி மான் முதலிய மிருகங்கள் அவர் மேல் உராய்ந்துசெல்ல, அதனைச் சிறிதும் அறியாதவராய்ச் சித்தத்தைச் சிவன்பால் வைத்து, அதனால் மிருககண்டூ ரென்னும் காரணப்பெயரைப் பெற்றிருந்தார். அன்னார் பின்னர் ஒரு மகவைக் குறித்துத் தவஞ்செய்து இறைவனருளால் மிருகண்டு என்னுமோர் புத்திரரைப் பெற்றார். அம்மிருகண்டு முனிவர் மருத்துவதியென்னும் உத்தமியை மணந்து காசியையடைந்து தவஞ்செய்தார். அப்போது சிவபெருமான் அவருக்குப் பிர

சன்னமாகி, 'நீ விரும்பியது யாது?' என்று வினவுதலும், மிருகண்டு முனிவர் எம்பெருமானைப் பணிந்து, "சுவாமி! அடியேனுக்குப் புத்திரப்பேறு வேண்டும்" எனப் பிரார்த்தார். சிவபெருமான் முனிவரை நோக்கி, "அறிவிலாதவனாய், தீக்குணமுடையவனாய், ஊமையும் செவிடும் முடமும் குருடுமாய், ஆயுட்காலமெல்லாம் நோயினால் வருந்துபவனாய் நூறு வயசுக்குச் சீவித்திருக்கும் ஒரு புதல்வன் வேண்டுமோ, அல்லது நல்லறிவும், நற்குணமும், மெய்யுணர்ச்சியும், ஈசுரபக்தியும், நோயற்ற சரீரமும், பேரழகும்வாய்ந்து கலைபயின்று பதினறு வயசுக்குச் சீவித்திருக்கும் ஒரு புதல்வன் வேண்டுமோ" என்று வினவ, முனிவர், "அற்பாயுளை உடையவனாயிருந்தாலும் தேவரீரிடத்து அன்புடையவனாய் இருக்கக்கூடிய ஒரு புதல்வனே வேண்டும்" என்று வேண்டி, வேண்டியவாறே ஒரு புதல்வரைப்பெற்று அவருக்கு மார்க்கண்டேயரென்று பெயரிட்டு வளர்த்தார். மார்க்கண்டேயர் பதினறு வயதை அடைந்தகாலத்தில் அவரது பெற்றோர் அவருக்குச் சிவபெருமான் அருளிய ஆயுளின் எல்லை நெருங்கியதை நினைந்து மனம் நோவதைக் கண்ணுற்று அவர்களது மனவருத்தத்தின் காரணத்தைத் தெரிந்து, அவ்வருத்தத்தைத் தீர்ப்பது தமது தலையாய கடனென்றுணர்ந்து, அவர்களை நோக்கி, "நான் சிவபெருமானைப் பூசைசெய்து இயமனுடைய வலியைக் கடந்து உங்களிடம் வருவேன்!" என்றுரைத்து அவர்களைத் தேற்றி, பிறகு சிவபெருமானைப் பூசித்துத் துதித்து அருந்தவஞ் செய்தார். அப்போது பத்திவலையிற் படுபவராகிய சிவபெருமான் மார்க்கண்டேயர் பூசித்த சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு, 'நீ விரும்பியது யாது?' என்று வினவ, மார்க்கண்டேயர், 'சிறியேன் இயமன் கைப்படாது உய்யும்பொருட்டு நீர் எதிர்வந்து அரு

லல் வேண்டும்' என்று பிரார்த்தித்தார். பிரார்த்தித்தலும் சிவபெருமான் மார்க்கண்டேயரை நோக்கி, "இயமனுக்கு அஞ்சாதே' என்று சொல்லித் தமது திருவடிகளிரண்டையும் அவரது சிரசில் வைத்துச் சிவலிங்கத்தில் மறைந்தார். பின்பு மார்க்கண்டேயர் இயமபயமின்றிச் சிவபூசை செய்துவந்தார். அவ்வாறு செய்து வந்தபோது தமக்கு அளவிடப்பட்ட கால வெல்லை செல்லவும், இயமதூதர்கள் அவரிடம் வந்து அவர் சிவபூசை செய்தலைக் கண்டு அவரிடத்துச் செல்வதற்கு அஞ்சி மீண்டனர். பிறகு இயமன் வந்து அவர்மீது தனது பாசத்தை வீசி இழுத்தான். அவர் அதற்கு ஒரு சிறிதும் அஞ்சாதவராய் எம்பெருமானைத் துதித்துக்கொண்டு அவருடைய நித்தியானந்த வடிவாகிய திருவடிமீழலைப் பிரியாதுநின்றார். உடனே அடியாரது அல்லலை அறுத்து அருள்புரியும் அன்புருவாய அரனார் அந்தணச்சிறுவர் அடைக்கலம்புகுந்த அவ்விலிங்கத்தினின்றும் ஆர்த்தெழுந்து அந்தகனைச் சினந்து தமது இடப்பாதத்தினாலே அவனை உதைத்தார். உதைத்தலும் இயமன் வீழ்ந்திறந்தான். பின்னர் எம்பெருமான் மார்க்கண்டேயருக்கு முடிவில்லாத ஆயுளைத் தந்து முன்போலவே சிவலிங்கத்தில் மறைந்தருளினார். பின்பு பூமிதேவியின் வேண்டுதலால் இயமன் மீண்டும் உயிர்பெற்றான் என்பதாம்.

இவ்வுண்மையினை:—

அந்த ணாளனுன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்ற னாருயி ரதனை
வவ்வினாய்க் குன்றன் வண்மைகண் டடியேன்

எந்தை நீயெனை நமன்றமர் நலியில்
இவன்மற் றென்னடி யானென விலக்கும்
சிந்தையால் வந்துன் றிருவடி யடைந்தேன்
செழும் பொழிற்றிருப் புன்கூரு ளானே

காலைநன் மாமலர் கொண்டடி பரவிக்
கைதொழு *மாணியைக் †கறுத்தவெங் காலன்
ஓலம திட்முன் னுயிரொடு மாள
உதைத்தவ னுமைபவள் விருப்பனெம் பெருமான்
மாலைவந் தணுக ‡ வோதம்வந் துலவி
மறிதிரை சங்கொடு பவளமு னுந்தி
$ வேலைவந் தணையுஞ் சோலைகள் சூழ்ந்த
¶ வெங்குரு மேவியுள் வீற்றிருந் தாரே"

என்னும் சுந்திரமூர்த்திநாயனர் மதுரவாக்காலும் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் திருவாக்காலும் அறிதல் கூடும்.

அ. உள்ளமா யுள்ளத்தே நின்றாய் போற்றி
உகப்பார் மனத்தென்று(ம்) நீங்காய் போற்றி
வள்ளலே போற்றி மணாளா போற்றி
வானவர்கோன் றோடுணித்த மைந்தா போற்றி
வெள்ளையே றேறும் விகிர்தா போற்றி
மேலோர்க்கு மேலோர்க்கு மேலாய் போற்றி
தெள்ளுநீர்க் கங்கைச் சடையாய் போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

குறிப்புரை:—உகத்தல்-விரும்பல். வள்ளல் - வரையாது கொடுப்போன். வானவர்கோன்-தேவர்க்கரசன், இந்திரன்.

---

* மாணி - பிரமசாரி, இங்கு மார்க்கண்டேயரைக் குறித்து நின்றது. † கறுத்தல் - கோபித்தல். ‡ ஓதம் - நீர்ப்பெருக்கு. $ வேலை - சமுத்திரம். ¶ வெங்குரு - சீர்காழி.

ஏறு - இடபம். தெள்ளுநீர் - தெளிந்த நீர், சுத்த நீர். கங்கையானது பரமசிவனது அருட் சத்தியாகிய உமாதேவி யாரது திருகரத்திற் றோன்றினமையாலும் பின்னர் அவரது திருச்சடையிற் சேர்ந்தமையாலும் நிருமலமுடைய தாதல் பற்றி இங்கு தெள்ளுநீர்க் கங்கை எனப்பட்டது என்றறிக.

**வானவர்கோன் தோள் துணித்தது:**— வெஞ்சுடரோன் பல்லிறுத்த கதையிற் காண்க.

**கங்கையைச் சடையில் வைத்தது:**— முன்னொரு நாள் உமாதேவியார் திருக் கைலாச மலையிலுள்ள சோலையிலே ஒரு விளையாட்டாகச் சிவபெருமானுடைய கண்களைப் பொத்தினர். சிவபெருமானுடைய கண்களே மற்றைச் சோதிகள் அனைத்திற்கும் காரணமா யிருத்தலால் சூரியன் சந்திரன் அக்கினி ஆகிய இவர்களின் சுடர்களும் மற்றைத் தேவர்களின் ஒளிகளும் பிற ஒளிகளும் அழிந்து எங்கும் ஒரே இருளாக அதனல் உயிர்களெல்லாம் வருந்தின. பிராட்டியார் பிரானது கண்களைப் பொத்தியகாலம் வெகு நுட்பமான ஒரு கணமேயாயினும் அக்கணம் உயிர்கட்கெல் லாம் ஊழிக்காலங்களாயது: அக்காலத்துப் பரம கருணை நிதியாகிய அரனர் ஆன்மாக்கள் படுந் துயரத்தை நீக்கி அருள்செய்யத் திருவுளங்கொண்டு, தம்முடைய நெற்றியி லே ஒரு கண்ணை யுண்டாக்கி, அதனல் அருளோடு நோக்கி, புவனமெங்கும் பரவிநின்ற இருளை நீக்கி, சூரியன் முதலாயி னோர்க்கும் ஒளியைக் கொடுத்தார். சிவபெருமானுடைய இவ்வருஞ் செயலை உமாதேவியார் நோக்கி அச்சமெய்தி, அவருடைய கண்களைப் பொத்திய தமது கைகளை எடுக்க வும், தமது பத்து விரல்களிலும் வியர்வை தோன்றியதைக் கண்டு கைகளை யுதறினர். அப் பத்து விரல்களினின்றும்

உதிர்ந்த வியர்வைத் துளிகள் பத்தும் பத்துக் கங்கைகளாகி அக்கங்கைகளில் ஒவ்வொன்றும் பல்லாயிர முகங்களைக் கொண்டு சமுத்திரங்கள்போல எங்கும் பரவ, அரிபிரமேந்திராதி தேவர்களும் அந்தப் பிரவாகத்தைக்கண்டு திகைலடைந்து திருக்கைலாசபதியிடம் சென்று முறையிட்டார்கள். திருக்கைலாசபதி அந்நதியின் வரலாற்றை அவர்களுக்குச் சொல்லி, அதனை அழைத்துத் தமது திருச்சடையிலுள்ள ஓர் உரோமத்தின்மீது விடுத்தார். அதனைக்கண்ட, பிரமாவும் விட்டுணுவும் இந்திரனும் அதில் ஒரு சிறிது தங்களுக்குத் தந்தருளும்படி வேண்ட, பரமசிவன் அவ்வாறே கொடுத்தனர். அவர்கள் அதனைக் கொண்டுபோய்த் தத்தம் நகர்களில் விடுத்தார்கள். பிரமலோகத்தை யடைந்த கங்கை பகீரத ராசனுடைய தவத்தினாற் பூமியின் மீண்டுவர, சிவபெருமான் பின்னும் அதனைத் தமது சடையிற்றாங்கி அதன் வேகத்தை அடக்கி, பின் இப்பூவுலகிற் செல்லும்படி விடுத்தார். அந்நதி சகரர்கள் யாவரும் மேற்கதி பெற்றுய்யும்படி அவர்களுடைய எலும்பிற் பாய்ந்து சமுத்திரத்திற் பெருகியது. இக்காரணம் பற்றிப் பூமியில் வந்த கங்கை பகீரதி என்றழைக்கப்பட்டது. மற்றை இரண்டு நதிகளும். தாம் புகுந்தவிடங்களில் இருந்தன. இவ்விதமாகச் சிவபெருமானது அருட்சத்தியாகிய உமாதேவியாருடைய திருக்கரத்திற் றோன்றிய கங்காதீர்த்தம் உலகங்களை அழியா வண்ணம் அடக்கிய வன்மையை அவர் முன்னாளில் ஒரு பெண்ணைச் சடையில் தாங்கினரென்பர்.

"மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது வென்னேடீ
சலமுகத்தா லவன்சடையிற் பாய்த்திலளேற் றரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ"

திருவாசகம்

௬. பூவார்ந்த சென்னிப் புனிதா போற்றி
புத்தேளிர் போற்றும் பொருளே போற்றி
தேவார்ந்த தேவர்க்குந் தேவே போற்றி
திருமாலுக் காழி யளித்தாய் போற்றி
சாவாமே காத்தென்னை யாண்டாய் போற்றி
சங்கொத்த நீற்றெஞ் சதுரா போற்றி
சேவார்ந்த வெல்கொடியாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

குறிப்புரை:—பூ ஆர்ந்த சென்னிப் புனிதன்-கொன்றை, ஊமத்தை, தும்பைப் பூங்கண்ணி பொருந்திய முடியையுடைய பரிசுத்தன் (நிமலன்). புத்தேளிர் - தேவர்கள். தே ஆர்ந்த தேவர்க்கும் தே - தேவரில் சிறந்தவர்களாகிய அரி பிரமேந்திராதி தேவர்க்கும் மேலான கடவுள். 'தேவார்ந்த தேவனை' என்றார் பிறிதோரிடத்தில். 'தேவர்கோ அறியாத தேவதேவன்' என்பது மணிவாசகர் திருவாக்கு. ஆழி - சக்கராயுதம். அளித்தல் - கொடுத்தல். 'சாவாமே காத்து என்னை ஆண்டாய்' என்றது நாயனார் சைவ சமயத்தினின்றும் சமண சமயத்திற் புகுந்து, திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகி, தீவண்ணர் திறம் ஒருகாற் பேசாராகி, ஒருகாலும் திருக்கோயில் சூழாராகி, உண்பதன் முன் மலர் பறித்திட்டு உண்ணாராகி, அருநோய்கள் கெட வெண்ணீறு அணியாராகி, பெருநோய்கள் மிக நலியப்பெயர்த்தும் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இருக்கவிருந்த தம்மை அவ்வாறு சாவாவண்ணம் தடுத்து ஆட்கொண்டமையைக் குறித்து உரைத்ததாகும் என்றறிக. சங்கொத்த நீறு - சங்கு போலும் வெள்ளிய திருநீறு. சதுரன் - சமர்த்தன். சே ஆர்ந்த வெல்கொடி - இடபம் பொருந்திய வெற்றிக்கொடி.

திருமாலுக்கு ஆழி அளித்தது:—முன்னொரு நாள் இந்திரன் திருக்கயிலாச மலையிலே சிவபெருமானை வழிபட எண்ணி. அகந்தைகொண்ட மனதுடன் செம்பொற்றிருக்கோயில் வாயிலிற் போயினான். அப்போது சிவபெருமான் ஒரு பிரமதகண வேடங்கொண்டு அவ்வாயிலில் நின்றார். இந்திரன் அவரை நோக்கி, "நீயார்? நாம் சிவபெருமானைக் காணவந்தோம். அதற்கு இது நல்ல சமயமா? சொல்லு" என்றான். சிவபெருமான் பதில் ஒன்றும் சொல்லாது அச்சந்தரும் நோக்கத்தோடு நின்றார். அப்போது இந்திரன் கோபங்கொண்டு குலிசாயுதத்தை அவர்மேல் எறிந்தான். அது அவர்மேற்படவும் நுண்ணிய துகளாயழிந்தது. உடனே பரமசிவன் பூதகண வடிவத்தை நீங்கி உருத்திர வடிவைத் தாங்கி, பிரமா முதலிய தேவர்களும் மற்றையுயிர்களும் அஞ்சும்படி உக்கிர வடிவுகொண்டு உருத்து நின்றார். இவ்வாறு நின்ற எம்பெருமானுடைய நிலையைக் கண்ட இந்திரன் பயந்து தருக்கொழிந்து அவரை வணங்கித் துதித்துத் தன் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினான். சிவபெருமான் இந்திரன்மேல் கிருபாநோக்கஞ் செய்து, தமது கோபத்தைச் சமுத்திரத்தில் வீசினார். அவ்வாறு வீசப்பட்ட கோபமானது ஒரு அசுரக் குழந்தை வடிவத்தை அடைந்து சமுத்திர ராசனால் வளர்க்கப்பட்டு அதனால் சலந்தரன் என்னும் நாமம் பெற்றது. சலந்தரன் யௌவன பருவத்தை அடைந்ததும் பூமியில் வந்து அவுணருடன் சேர்ந்து தேவர்களை வருத்த, அவர்கள் அஞ்சியோடி மேருமலையில் ஒளித்தார்கள். சலந்தரன் அங்கே சென்று தேவர்களை வருத்தி அவர்களைக் காக்கும்படி வந்த தன்னுடன் கொடிய போரினைச்செய்த விட்டுணுவைத் தோற்கடித்தான். பிறகு தேவர்கள் இந்திரனுடன் கயிலையங்கிரியை யடைந்தார்கள். சலந்தரன் அதனையறிந்து, தான் விட்டுணுவைப் போரில்வென்ற இறுமாப்பினால் 'சிவனையும் போரில்வென்று இந்திரனுக்கும் தேவர்களுக்கும் தீங்கிழைப்பேன்' என்று உரப்பிக்கொண்டு கயிலைக்குச் சென்றான். போகும் வழியில் பரமசிவன் ஒரு வயோதிகப்

பிராமண வேடங்கொண்டு அவனெதிரிற் றோன்றி, "நீ எங்கே போகின்றாய்?, என்று கேட்க, அவன், 'நான் சிவனுடன் போர்செய்யப் போகிறேன்' என, "அப்படியானால் இப்போது உன் பலத்தை என்னிடம் காட்டு பார்க்கலாம்" என்று அங்குப் பூமியினிடத்தில் தம்முடைய திருவடி விரலால் ஒரு சக்கரத்தைக் கீறினார். அது ஒரு சக்கராயுதமாயிற்று. அப்போது சிவபெருமான் சலந்தரனை நோக்கி, 'இதனை உன் சிரத்தில் தாங்கவல்லையோ?' வென்ன, சலந்தரன் அதனைக் கையிலெடுத்துச் சிரசின்மேல் தூக்கி வைத்து அதன் பாரத்தைத் தாங்கமுடியாது உடம்பு பிளந்து கீழே விழுந்து இறந்தான். இந்திரனும் தேவர்களும் துன்பம் நீங்கி எம்பெருமானைத் துதித்து விடைபெற்றுத் தங்கள் இருப்பிடத்துக்குச் சென்றார்கள். சக்கரப்படை சிவபெருமானை அடைந்தது.

பின்னொரு காலத்தில் இராக்கதர்கள் உலகங்களைப் பீடித்துத் தருமவிக்கினஞ் செய்ய, அவர்களால் நலிவடைந்த தேவர்கள் விட்டுணுவை யடைந்து முறையிட்டார்கள். திருமாலனவர் அத்தேவர்களை இரட்சிக்கத் திருவுளங்கொண்டு மிகப் பலசாலிகளாகிய அவ்விராக்கதர்களை வெல்வதற்கான சக்தியைப் பெறவெண்ணிச் சிவபெருமானது ஆயிரந் திருநாமங்களையுந் தியானித்து ஆயிரஞ் செந்தாமரை மலர்களால் சிவபெருமானை நெடுநாட்கள் அருச்சித்து வந்தார். அவர் அவ்வாறு அருச்சிக்கையில் ஒருநாள் ஈசுவர சங்கற்பத்தால் ஒருபூக் குறையவும் திருமாலானவர் சிவபூசா நியமனத்துக்கு விக்கினம் வருவதைச் சகியாது செந்தாமரை மலரை நிகர்த்த தமது கண்களிலொன்றைப் பறித்து அருச்சித்தனர். உடனே பத்திவலையிற் படுபவராகிய சிவபெருமான் பிரசன்னராகித் தமது கையிலிருந்த சக்கராயுதத்தை அவருக்குக் கொடுத்தருளினர் என்பதாம். இதற்குப் பிரமாணம்:—

பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்க ணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கர னெம்பிரான் சக்கரமாற் கருளியவா
றெங்கும் பரவிநாந் தோணோக்க மாடாமோ

திருவாசகம்.

நீற்றினை நிறையப் பூசி நித்தலா யிரம்பூக் கொண்டு
ஏற்றுழி யொருநா ளொன்று குறையக்கண் ணிறைய விட்ட
ஆற்றலுக் காழி நல்கி யவன்கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே.

அப்பர்.

இடபக்கொடியின் வரலாறு:—சர்வசங்கார காலத்தில் ஆனதாணையால் அண்டமுழுவதும் அக்கினிக் கிரையாகி அழிக்கப்பட்ட அவசரத்தில் அழியாதுநின்ற அறக்கடவுள் ஆனேறுருத்தாங்கி அமலன் அருகிற்சென்று அஞ்சலி செய்து அவரது அநுக்கிரகத்தைத அவலம்பித்து நிற்க, அப்போது அந்திவண்ணர் அவ்விடபத்தின்மேல் ஆரோகணித்து, சர்வசங்கார காலத்தும் அழிவின்றி நிற்கும் ஆற்றலினையுடையது அறமொன்றே ஆகுமென்னும் அரிய வுண்மையினை ஆன்மாக்கள் அறிந்து அவ்வறத்தினை ஆசரித்தொழுகி அருட்பெருஞ் செல்வத்தை அடையும் அவாவினால் அவ்வறத்தின் அடையாளமாய் அமர்ந்த இடபத்தின் உருவத்தை எழுதிய ஓவியத்தைத் தமது கொடியாக நிறுத்தினர் என்றறிக.

௮. பிரமன்றன் சிரமரிந்த பெரியோய் போற்றி
பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி
கர(ம்) நான்கு(ம்) முக்கண்ணு முடையாய் போற்றி
காதலிப்பார்க் காற்ற வெளியாய் போற்றி
அருமந்த தேவர்க் கரசே போற்றி
அன்றரக்க னைந்நான்கு தோளுந் தாளும்
சிர(ம்) நெறித்த சேவடியாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

குறிப்புரை:—பெண்ணுருவோடு ஆணுருவுங் கூடிய அர்த்த நாரீசுர மூர்த்தம். கரம் நான்கு—வலப்புறத்தில் தமருகம் (உடுக்கை) தாங்கியதொன்றும் மூவிலை வேற்சூலம் பற்றியதொன்றும், இடப்புறத்தில் மான்கன்று பிடித்ததொன்றும் அனல் ஏந்தியதொன்றும் ஆக நான்கு. இவற்றுள், முதற்கரத்திலுள்ள உடுக்கையின் சப்தத்தினால் படைத்தற்றொழிலும், இரண்டாவது கரத்திலுள்ள சூலத்தினால் அபயமும் மூன்றாவது கரத்தினால் வரதமும் ஆகிய இருவகைப் பாகுபாட்டினதாகிய காத்தற்றொழிலும், நான்காவது கரத்திலுள்ள அக்கினியினால் அழித்தற்றொழிலும் நிகழுமென்பர். இன்னும் சிவபெருமானது பஞ்சகிருத்தியங்களுள் மேற்கூறிய மூன்றினையும் நீக்கி, எஞ்சிநின்ற மறைத்தற்றொழில் அவரது நடராச மூர்த்தத்தின் ஊன்றிய பாதத்திலும் அருளற்றொழில் தூக்கிய திருவடியிலும் நிகழுமென்பதும் கற்றவர் கூற்று.

முக்கண்—வலக்கண் இடக்கண் நெற்றிக்கண் என மூன்று; இவை முறையே சூரியன் சந்திரன் அக்கினி என்னும் முச்சுடர்களின் இருப்பிடமாகும். அன்றியும், இம் மூன்று கண்களும் சிவபெருமானது பஞ்ச சத்திகளில் ஆன்மாக்களுக்கு முத்தியின்பமளிக்க விரும்புதலாகிய இச்சாசத்தியையும், ஆன்மாக்களின் கருமங்களையறிந்து ஊட்டுதலாகிய ஞானசத்தியையும், ஆன்மாக்களுக்கு வேண்டுவனவற்றைக் கொடுத்து இரட்சித்தலாகிய கிரியாசத்தியையும் குறிக்குமென்பதும் ஆன்றோர் கட்டுரை.

சிவபெருமானது நெற்றிக்கண்ணின் வரலாறு—முன்னர்க் கங்கையைச் சடையில்வைத்த கதையிற் கூறப்பட்டிருத்தலைக் காண்க.

காதலிப்பார்க்கு ஆற்ற எளியன் = அன்பு செய்பவர்க்கு மிகவும் சுலபமானவன்; 'காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது', 'காதலாலே கருதுந் தொண்டர் காரணத்தராகி நின்றே பூதம் பாடப்புரிந்து நட்டம் புவனியேத்த ஆடவல்லீர்' என்றார் பிறரும். அரு

மந்த - அருமருந்தன்ன ; (அருமருந்து - அமிர்தம் - சாவா மருந்து). தேவர்கள் அமிர்தத்தையுண்டு நெடுங்காலம் சாவா திருக்கும் பேறுபெற்றதனால் 'அருமந்த தேவ' ரெனப் பட்டார் என்றறிக. அரக்கன் - இராக்கதன். 'ஐந்நான்கு தோள்' என்றதனால் அரக்கனென்னும் பதம் இங்கு இராவணனைக் குறித்து நின்றது. சே அடி - சிவந்த பாதம்.

**பிரமன் சிரமரிந்தது:**—முன்னொருநாளில் விட்டுணுவும் பிரமாவும் மேருமலையில் இருக்கும்போது முனிவர்களும் தேவர்களும் அவர்களிடஞ்சென்று வணங்கி, திரிமூர்த்திகளில் மேலானவர் யாவரென்று வினவினார்கள். அப்போது பிரமா தாமே மேலானவரென்ன, விட்டுணுவும் அவ்வாறே கூறினார். அவ்வாறு கூறிய இருவரும் உடனே தம்முள் மாறுபட்டுப் பூசலிட்டார்கள். அப்போது சிவபெருமான் அமலமாகிய சோதிவடிவாய் ஆகாயத்திலே தோன்றி, அச்சோதியினிடையே தாம் உமாசமேதராய்த் திருக்கைலாசமலையில் வீற்றிருக்கின்ற திருக்கோலத்தோடு நின்றார். உடனே விட்டுணு மாயையினீங்கி எழுந்து வணங்கினார். பிரமாவோ அவ்விதம் செய்யாது தமது உச்சிச்சிரசிலுள்ள வாயினால் சிவபெருமானை இகழ்ந்தார். பிரமாவின் அகந்தையைக்கண்ட சிவபெருமான் அவர்மேற் சிறிதும் சினங்கொள்ளாதவராய் அவருடைய பாவத்தைத் தொலைக்கவும், மற்றைத் தேவர்கள் முனிவர்கள் முதலாயினாருடைய அகந்தையைக் கெடுக்கவும் நினைத்து, தமது திருவுள்ளத்தினின்று வயிரவரைத் தோற்றுவித்து, செயற்பாலதை அவ்வயிரவருக்குக் கூறியருளிச் சோதியில் மறைந்தார். சோதியும் மறைந்தது. உடனே வயிரவக்கடவுள் சிவபெருமான் தமக்குக் கூறியவண்ணம் பிரமாவினுடைய உச்சிச் சிரசைக் கிள்ளிக் கையிலேந்தினார். அதனால் பிரமா உயிரிழக்கவும், வயிரவக்கடவுள் அவருக்கு உயிரைக் கொடுத்தார். பிரமா எழுந்து நல்லுணர்வு வரப்பெற்று வயிரவரை வணங்கித் துதித்தார். பிறகு வயிரவக்கடவுள் மேருமலையை நீங்கிப் போய், தருக்குற்ற முனிவர்களும் தேவர்களும் இருக்கு

பீடங்களிற் சென்று, அவர்கள் உடம்பிலுள்ள இரத்தத்தைத் தமது கரத்திலேந்திய பிரமகபாலத்தில் பிக்ஷையாக ஏற்று, அதனால் உயிரிழந்த அவர்களுக்கும் மீட்டும் உயிரைக் கொடுத்து, அவர்களுடைய மனக்களங்கங்களையும் மாற்றி, பிறகு விட்டுணுவிடம் சென்று அவரது சிரசிலுள்ள இரத்தத்தையும் பிக்ஷையேற்று, அண்டகடாகத்திற் சென்று அங்கு வைரவபுவன பதத்திலிருந்து, மனிதர்களையும் தேவர்களையும் துன்பநீங்கக் காத்துவந்தார் என்பதாம்.

இவ்வயிரவக்கடவுள் சர்வசங்கார காலத்தில் பிரமாதி தேவர்களது சிரங்களைச் சேதித்து, உயிர்களெல்லாவற்றையும் சங்கரித்து, புவனங்கள் எல்லாவற்றையும் பொடியாக்கி வேதமாகிய நாய்வாகனத்திலேறி உலாவுவார்.

திருச்சிற்றம்பலம்



# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| உ | ௰௩ | சிவகாமங்களை | சிவாகமங்களை |
| எ | ௰ | சமானிய | சாமானிய |
| ,, | ௰உ | இருட்டரை | இருட்டறை |
| ,, | ௰௪-௰௩ | சமைய | சமய |
| ௧௦ | ௧ | திருகரத் | திருக்கரத் |
| ௧௫ | ௬ | வீழமிழிலை | வீழிமிழலை |

## புத்தகம் கிடைக்கும் இடங்கள்

---

லோகோபகாரி ஆபீஸ்,
மவுண்டுரோடு, சென்னை.

திரிபுரசுந்தரி அச்சியந்திரசாலை,
திருவல்லிக்கேணி, சென்னை.

பரமசிவன்பிள்ளை,
நெ. 22 பார்த்தசாரதி நாயுடு தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
306, லிங்கச்செட்டி தெரு, சென்னை.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
கீழ ரத வீதி, திருநெல்வேலி.